**ஒருங்கிணைதலின் தேசியமாக**

நேற்று ஒரு நண்பர் வீட்டுக்கு வந்து பேசிக்கோண்டிருக்கும்போது காந்தியைப்பற்றிய பேச்சு வந்தது. அவர் ஆர்.எஸ்.எஸ்.இயக்கத்தவர். அவ்வியக்கத்தைச் சேர்ந்த ஒரு அம்மையார் காந்தி பிரிட்டிஷாரின் கைக்கூலி என்றவகையில் ஒரு பெரிய நூல் எழுதியிருப்பதைச் சொன்னார். 'இந்து அரசின் மறைவு :காந்தியும் அவரது சுதந்திரப் போராட்டமும்' [Eclipse of the Hindu Nation: Gandhi and HIS Freedom Struggle , Radha Rajan] அந்நூலை தான் ஏற்றுக்கொள்ளவில்லை என்று சொன்ன அவர் ஆனால் அப்படி எண்ணும் ஏராளமானவர்கள் இருப்பதாகச் சொன்னார். இந்நூலைப் புகழ்ந்து ஆர்.எஸ்.எஸ் இயக்கத்தின் அமைப்புகள் கட்டுரைகள் எழுதித்தள்ளுகின்றன. ஆர்கனைசர் போன்ற அதிகாரபூர்வ இதகளில் கூட சாதகமான மதிப்புரைகள் வருகின்றன.

அந்நூலைப்பற்றி இணையத்தில் தேடி அதன் சுருக்கத்தை தெரிந்துகொண்டேன். ஒரு சராசரி பிராமண சாதியாதிக்க மனம் எப்படிச் செயல்படும் என்பதற்கான மிகச்சிறந்த உதாரணம் இந்நூல். இன்றும் என்றும் அழியாமல் இந்திய சிந்தனையில் இருந்துகொண்டிருக்கும் கரியநிழலின் ஒரு கருத்துநிலை.

ஆனால் அதை ஒரு தரப்பாக நிறுத்திக்கொண்டுதான் நாம் இந்திய சிந்தனையை, இந்து ஞானமரபை, இந்திய அரசியலைப் பற்றிப் பேச முடியும். எப்படி ஐரோப்பிய சிந்தனையில் பாசிசம் கிரேக்கப் பண்பாட்டின் ஆரம்பம் முதலே இருந்துகொண்டிருக்கிறதோ அதேபோல இது இந்திய சிந்தனைமரபில் கலந்து என்றும் இருக்கிறது. இதையும் சேர்த்துத்தான் நாம் இந்தியப் பண்பாடு என்கிறோம்.

**மதம் தேசியமாக மாறும் மந்திரம்**

இந்நூலின் சாராம்சம் என்ன என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியும், ஏன் என்றால் இச்சிந்தனையின் மையத்தில்தான் நான் என் முதிரா இளமைப்பருவத்தில் சில வருடங்களைச் செலவழித்திருக்கிறேன். இதன்

அடிப்படை நோக்கு என்பது சிலவகையான எளிமைப்படுத்தல்களில் இருந்து ஆரம்பிக்கிறது. அவற்றை இப்படிச் சுருக்கிச் சொல்லலாம்

1 தொல்பழங்காலம் முதல் இந்திய நிலப்பரப்பில் இருந்து வந்த பன்மைத்தன்மை கொண்ட பண்பாட்டுத்தேசிய உருவகத்தை நவீன ஐரோப்பாவில் உருவாகிவந்த ஒற்றைமைய அரசியல்தேசியமாக உருவகித்துக்கொள்வது.

2 பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தொடங்கிய இந்து மதச் சீர்திருத்த இயக்கங்களையும் அதன் நீட்சியாக உருவான இந்திய மறுமலர்ச்சியுகத்தையும் எல்லாம் ஒட்டுமொத்தமாக நவீன இந்து தேசியத்தின் உருவாக்கத்தின் வளர்ச்சிக்கட்டங்களாக பார்ப்பது.

3. இந்து மதத்தை ஒற்றைமையமுள்ள ஒரு கட்டுமானமாக உருவகித்துக்கொள்வது

4. அந்த இந்து மதத்தை அப்படியே நவீன ஐரோப்பிய பாணியிலான இந்து தேசியமாக உருமாற்றி எண்ணிக்கொள்வது

5.இந்திய மக்களில் பெரும்பாலானவர்கள் இந்துக்கள் என்பதனால் அவர்கள் இந்து தேசியத்தின் மையப்படுத்தப்பட்ட அமைப்பை ஏற்கனவே ஏற்றுக்கொண்டுவிட்டார்கள் என்று எண்ணிக்கொள்வது.

இந்த 'பஞ்சபிரமை'களில் அடிப்படையில் மேற்கொண்டு ஆதாரங்களைத் 'திரட்டி' இந்தியாவில் உருவாகி வந்த இந்து தேசியத்தை காந்திதான் கெடுத்தார் என்று வாதாடுகிறார்கள். காந்தி அப்படி கெடுப்பதென்றால் அது பிரிட்டிஷ் சதியாகத்தானே இருக்க வேண்டும்? ஆகவே காந்தி பிரிட்டிஷாரால் இந்திய அரசியலுக்குள் புகுத்தப்பட்ட ஓர் ஐந்தாம் படை என்கிறார்கள். கிட்டத்தட்ட எழுபதாண்டுக்கால வரலாறுள்ள இந்த ஒடையின் வழியாகவே ராதா ராஜனும் ஒழுகிச் செல்கிறார் என ஊகிப்பது எளிது.

இந்த ஒட்டுமொத்தச் சிந்தனையையே நான் ஒருவகை 'பண்பாட்டுப் பண்டமாற்றுக் கொள்கை' என்று சொல்வேன். எதை வேண்டுமானாலும் இந்து தேசியமாக மாற்றிக்கொடுக்கக் கூடிய ஒரு வங்கி இவர்களிடம் இருக்கிறது. இந்துஞான மரபை, பௌத்த-சமண மரபை, இந்தியப்

பண்பாட்டை, இந்திய மறுமலர்ச்சியை, சைவத்தை, வைணவத்தை, சத்தியசாயிபாபாவை எதை வேண்டுமானாலும் கொடுங்கள் கச்சிதமாக இந்து தேசியமாக மாற்றி வெளியே நீட்டும்.

மேலே சொன்ன ஐந்துமே வரலாற்றுணர்ச்சி இல்லாத வெறும் மனப்பிரமைகள் மட்டுமே என்று ஊகிப்பதற்கு இந்திய வரலாற்றை ஒருமுறை மேலோட்டமாக வாசித்துப்பார்த்தாலே தெரியும். பழங்காலம் முதலே இந்திய நிலப்பகுதி ஒரு பண்பாட்டுத்தேசமாக உருவகிக்கப்பட்டிருக்கிறது. 'ஆசேது ஹிமாசலம்' என்று அதன் எல்லை வகுக்கப்பட்டிருக்கிறது. கங்கையும் காவிரியும் வரை அதன் நதிகள் அடையாளப்படுத்தப்பட்டிருக்கின்றன. தெற்கே இருந்து காசிக்கும் வடக்கிலிருந்து கன்யாகுமரிக்கும் அதன் தீர்த்தயாத்திரைகள் வகுக்கப்பட்டிருக்கின்றன.

ஆனால் இது இன்றைய நவீன தேசியம் அல்ல. அரசியல்,பொருளியல் மையம் கொண்ட ஒரு உறுதியான நிர்வாக அமைப்பையே நாம் நவீனதேசியம் என்கிறோம். அது ஐரோப்பாவில் பதினாறாம் நூற்றாண்டுமுதல் மெல்ல மெல்ல உருவாகி வந்தது. இந்தியாவின் பண்பாட்டுத்தேசியத்தை ஒரே அரசியல் தேசியமாக ஆக்க எப்போதும் மன்னர்கள் முயன்றுவந்திருக்கிறார்கள். அதற்காக இந்தியாவை வென்றடக்குவதென்பது ஒவ்வொரு அரசருக்கும் கனவே. ரகு இமயத்தையும் கேரளத்தையும் வென்றான் என்று காளிதாசன் சொல்லும்போது செங்குட்டுவன் இமயத்தை வென்றான் என்று நாம் சொல்கிறோம்

அசோகர் முதல் அக்பர் வரை அந்தக்கனவுக்காக முயன்றிருக்கிறார்கள். முழுமையாக அது சாத்தியமானதே இல்லை. இந்தியாவில் இந்த சிறப்பியல்பை நாம் எப்போதும் காணலாம். ஒருபோதும் மொத்த இந்தியாவும் ஒரே அரசியல் நாடாக இருந்ததில்லை. அதேசமயம் பெரும்பாலான காலகட்டங்களில் இந்திய நிலத்தின் பெரும்பகுதியை ஆண்ட பேரரசுகள்தான் இந்தியாவில் இருந்திருக்கின்றன. இந்தியாவை முழுமையாக கட்டுப்படுத்திய பிரிட்டிஷ் அரசுகூட இந்தியாவை முழுக்க ஒரே நாடாக ஆளவில்லை .

ஆகவே எப்போதுமே ஐரோப்பிய நவீனத் தேசியம்போல ஒரு அரசியல்-பொருளியல் நிர்வாக மையம் கொண்ட தேசியம் இங்கே இருந்ததில்லை. இங்கே இந்தியாவை பெரும்பாலும் வென்று ஆண்ட

அரசுகள் முதல் சிறிய அரசுகள் வரை எல்லாமே மையமில்லா அரசுகளே. கூட்டரசு என்ற அமைப்பே என்றும் இருந்தது. பிரிட்டிஷ் அரசும் அத்தகையதே. காரணம் பன்மைத்தன்மை மிக்க இந்திய சமூகத்துக்கு ஏற்றதாக உருவாகி வந்த முறை அது.

இந்தியாவில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் உருவாகிவந்த மதச்சீர்திருத்த இயக்கங்களின் வேர்கள் பக்தி இயக்கத்தில் உள்ளன. பத்தாம் நூற்றாண்டுமுதல் தென்னிந்தியாவில் உருவாகி பின்னர் வடக்கே பரவிய பக்தி இயக்கம் என்பது சம்பிரதாய இந்து மதநோக்குகளுக்கு முற்றிலும் எதிரானது. அது பழமையை அப்படியே தக்கவைக்கவோ மீட்டெடுக்கவோ முயலவில்லை. பௌத்தம், சமணம், இஸ்லாம் என புதிய சிந்தனைகளை உள்வாங்கிக்கொண்டு பழமையின் சாரமாக இருந்த ஆன்மீகத்தை புதுப்பிக்க முயன்றது

ஆகவே பழைமையான மத அமைப்புகளுக்கு எதிராக இருந்தது பக்தி இயக்கம். அவற்றின் காலகட்டத்தை வைத்துப் பார்த்தால் அவை சாதி, மத, இன ஆசாரங்களை மீறுபவையாக இருந்தன. பக்தி இயக்கத்தவர் பெரும்பாலும் அனைவருமே புரட்சியாளர்கள். அக்கால இந்துசமூக பழமைவாதத்தின் கடுமையான ஒறுத்தலுக்கு ஆளானவர்கள். அந்த இயக்கத்தின் நீட்சியாக அமைந்த இந்துசீர்திருத்த இயக்கங்களிலும் அந்தப்புரட்சிகரம் உண்டு.

விவேகானந்தர் போன்ற ஒருவரின் சொற்களை பார்த்தாலே அதை தெரிந்துகொள்ள முடியும். அவரது பல வரிகள் இன்றும்கூட ஆசாரமான இந்துவை உடல் எரியச்செய்பவை. இந்து மதமரபுக்கும் இந்து பக்தி மற்றும் சீர்திருத்த மரபுகளுக்கும் மகத்தான முரணியக்கம் உண்டு. அந்த உண்மையை மழுப்பியே இந்து சீர்திருத்த இயக்கத்தை சனாதனமான இந்து தேசியத்தின் மறு எழுச்சியாகச் சித்தரிக்கிறார்கள். அதற்காக விவேகானந்தரையும் காஞ்சி சந்திரசேகர சரஸ்வதியையும் ஒரே வரிசையில் அமரச்செய்கிறார்கள்.

இந்துமதம் என்றுமே ஒற்றைக்கட்டுமானமாக இருந்ததில்லை. இந்து ஞானமரபுக்குள் இருந்த ஆறுவகை மதங்களும் ஆறு தரிசனங்களும் தனித்தனியாகவே செயல்பட்டன. ஒன்றுடன் ஒன்று விவாதித்தன. அவை

அனைத்தும் ஒத்துக்கொள்ளும் மையம் என ஏதும் இல்லை. அது ஒரு ஞானவிவாதக்களம் மட்டுமே. காலப்போக்கில் அவை இருமதங்களாகி பின் ஒருமதமாக கருதப்பட்ட போதும்கூட இந்துமதத்துக்குள் அந்தப்பன்மை எப்போதுமே இருந்துகொண்டிருக்கிறது. அதை ஆபிரகாமிய மதங்களைப்போல ஒற்றைமையக் கட்டுமானமாக இவர்களே உருவகித்துக்கொள்கிறார்கள்.

'நான் நாத்திகன் ஆனால் இந்து, இதை உங்களால் மறுக்க முடியுமா?' என்று ஒருமுறை ஜெயகாந்தன் கேட்டார். 'நான் வேதவிரோதி, ஆனால் இந்து' என்று ஒருவன் சொன்னால் 'நான் கண்ணனையும், ராமனையும் ஏற்றுக்கொள்ள மாட்டேன். ஆனால் நான் இந்து' என ஒருவன் சொன்னால் 'நான் மறுபிறப்பையும், பாவபுண்ணியங்களையும், வேள்வியையும், வழிபாட்டையும், வேத இதிகாச மரபுகளையும் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால் நான் இந்து' என ஒருவன் சொன்னால் இந்துமதம் என்றால் என்ன என்று அறிந்தவர் அதை மறுக்க மாட்டார். ஆனால் இவர்கள் மறுப்பார்கள். அதிகாரம் கிடைத்தால் அந்த இயல்பான பன்மையை அழிக்க நேரடி வன்முறையிலும் ஈடுபடுவார்கள்.

இந்த ஒற்றைமையமுள்ள இந்து மதம் அப்படியே இந்துதேசியமாகவும் இருக்கிறது என இவர்களே எண்ணிக்கொள்கிறார்கள். ஒருகாலத்திலும் இந்து மதத்துக்கு உறுதியான நிர்வாக அமைப்பு இருந்ததில்லை என்றும் அந்த சுதந்திரமே அதன் மகத்துவமும் வலிமையும் ஆகும் என்றும் இவர்கள் அறிவதில்லை. இந்துமதம் ஒருவருக்கு மிக அந்தரங்கமான ஞானத்தேடலையே திறந்து வைக்கிறது. அவரை ஒரு கூட்டமாக ஆக்குவதில்லை. மேலும் மேலும் தனியனாகவே ஆக்குகிறது. அதற்கும் தேசியம் போன்ற உலகியல் விஷயங்களுக்கும் நேர்தொடர்பே இல்லை

இந்த அறியாமையில் இருந்து, ஆதிக்க நோக்கில் இருந்து, பழமைவாதத்தில் இருந்து உருவான ஒரு போக்குக்கு காந்தி துரோகியாக, ஐந்தாம்படையாக, அயோக்கியனாக தெரியவில்லை என்றால் அவரது இருப்பே அர்த்தமில்லாத ஒன்றாக ஆகிவிடும் என்று எனக்குப் படுகிறது. ராதா ராஜன் போன்றவர்களின் வாயில் இருந்து காந்திக்குக் கிடைக்கும் பாராட்டுதான் காந்திக்கு பெரும் களங்கம்.

ராதா ராஜன் ஆங்கிலத்தில் பேச ஆரம்பித்திருக்கும் அதே பழைய குரல்தான். அக்குரல் ஏன் காந்தியை எதிரியாகக் கருதுகிறது என்பதற்கு வரலாற்றுக்

காரணம் ஒன்று உண்டு. இந்தியாவின் உருவாக்கத்தில் தொகுப்புசக்தியாக செயல்பட்ட மூன்று கருத்தியல்கள் உண்டு. பிராமண-ஷத்ரிய கூட்டுக்கருத்தியல் முதலானது. சமண-பௌத்த கருத்தியல் இன்னொன்று. பக்தி இயக்கத்தின் கருத்தியல் மூன்றாவது.

பிராமண-ஷத்ரிய கருத்தியல் பிற அனைத்தையும் உள்ளிழுத்து சாரம்சப்படுத்தும் தன்மை கொண்டது. அதனூடாக அதிகார அடுக்கை உருவாக்குவது. வன்முறையம்சம் உடையது. இரண்டாவது, போதிக்கும் தன்மை கொண்டது, அதனால் குறைவான அளவிலேயே உள்ளிழுக்கும் தன்மை கொண்டது. அதேசமயம் உரையாடலை சார்ந்தது, அகிம்சைநெறி கொண்டது. மூன்றாவதாக, பக்தி இயக்கம். அது ஏற்கனவே இருந்த அதிகார அடுக்கை மாற்றியமைக்கும் போக்கு கொண்டது. பெருந்திரளாக மக்களைக் கூட்டும் தன்மை கொண்டது. அது சமண-பௌத்த கருத்தியல்களை உள்வாங்கிக்கொண்டு புதிதாக பிறந்து வந்தது. அதுவும் உரையாடல் தன்மைகொண்டதே.

இந்திய அரசியலின் ஒரு காலகட்டத்தில் பிராமண-ஷத்ரிய கூட்டுக்கருத்தியல் பாலகங்காதர திலகரின் தலைமையில் அரசியலாதிக்கத்தை கைக்கொள்ளும் நிலை இருந்தது. அந்த பிராமணா -ஷத்ரிய கருத்தியல் என்பது இவர்கள் சொல்வதுபோல இந்து மரபின் அல்லது இந்து தேசியத்தின் முழுமையான தரப்பு அல்ல. இந்திய மரபின் ஒரு சிறு தரப்பு மட்டுமே. இந்து மதம் என நாம் இன்று சொல்வதன் பெரும்பகுதி பக்தி இயக்கத்தின் சிருஷ்டியாகும்.

அந்த பிராமண-ஷத்ரிய கூட்டுக்கருத்தியலுக்கு எதிராக சமண-பௌத்த மரபு மற்றும் பக்தி மரபின் பிரதிநிதியாக வந்தவர் காந்தி. பிராமண-ஷத்ரியக் கருத்தியலை மொத்தமாக அரசியல் தளத்தில் இருந்து ஓரம்கட்டியவர். அவர் வாழ்நாள் முழுக்க போராடியது அதனுடன்தான். கொல்லப்பட்டதும் அதனால்தான்.

மேலே சொன்ன அந்த பிராமண-ஷத்ரியக் கருத்தியல் என்பதில் ஷத்ரியர் என்பவர்கள் நேரடியாக அனேகமாக இடம்பெறவில்லை என்பதையும் கவனிக்கவேண்டும். ஷத்ரிய வீரியம் என்ற கருத்துக்கூறு அதில் பிராமணர்களால்தான் முன்வைக்கப்பட்டது. ஆகவே அது ஷத்ரிய தர்மத்தைப்பேசும் பிராமணியக் கருத்தியலே. அது காந்தியை தன் எதிரியாகக் கருதுகிறது. இந்தியாவின் ஷத்ரிய வீரியத்தை அழித்த பனியா

என அவரை நினைக்கிறது. வெறுக்கிறது, வசைபாடுகிறது, அவதூறு செய்கிறது.

இந்து மத அமைப்புக்குள் பல நூற்றாண்டுகளாக பிராமணியக் கருத்தியலுக்கும் பிற பெரும்பான்மையினரின் கருத்தியலுக்கும் இடையே போராட்டம் நடந்து வந்துள்ளது. இதை ஒரு கருத்துப்போராட்டம் என்றே சொல்லவேண்டும். ஆகவே இது உரையாடலும் கூட. பிராமணியக் கருத்தியலில் பக்தி இயக்கம் ஆழமான மாற்றங்களை செய்தது. பக்தி இயக்கத்தை பிராமணக் கருத்தியலும் பாதித்தது.

இந்த முரணியக்கம் இல்லாத தளம் இல்லை. ஆர்.எஸ்.எஸ் போன்ற அமைப்புகளுக்குள்ளேயே கூட. ஆகவேதான் ஒருபக்கம் காந்தியை தன் பிரார்த்தனையில் மகாத்மா என்று பாடுகிற ஆர்.எஸ்.எஸ்ஸின் ஒருபிரிவே ராதா ராஜனை தூக்கிப்பிடிக்கிறது. ராதாராஜன் போராடுவது ஆர்.எஸ்.எஸ்சுக்குள் உள்ள அந்த மறு குரலுடன், காந்தி மீது மதிப்புள்ள குரலுடன், மட்டுமே.

மேலும் உள்ளவை, அரசியல் காரணங்கள். இன்று இந்தியாவில் தலித்துக்களானாலும் சரி, கம்யூனிஸ்டுக்களானாலும் சரி, திராவிட இயக்கமானாலும் சரி, தங்கள் சொந்த இயலாமைக்கும் தோல்விக்கும் காந்தியின் சதி என்று சொல்வதே வாடிக்கை. இந்திய தலித் சமூகத்தின் பன்மைத்தனமையை , பண்பாட்டு ஊடுபாவுகளை கொஞ்சமும் கணித்தறியாமல் ஒற்றைப்படையான ஓர் அரசியலியக்கமாக அவர்களை திரட்ட முயன்று தோல்வியடைந்த அம்பேத்கார் அந்தத் தோல்விக்கு காந்தியையே காரணம் காட்டினார். காந்தி இந்திய நடைமுறை அரசியலில் பழங்கதையாகி விட்ட இன்றும் அவர்களால் ஒருங்குதிரள முடியவில்லை என்ற யதார்த்தமே அவருக்குப் பதிலாக நிற்கிறது.

அதேபோல பன்மைத்தன்மை கொண்ட இந்து ஞானமரபு மனிதனை அந்தரங்கமான ஞானத்தேடல்கொண்டவனாக மட்டுமே ஆக்கும் என்ற உண்மையையும், இந்து சமூகத்தின் இயல்பான பன்மைத்தன்மையையும் புரிந்துகொள்ளாமல் மூர்க்கமான ஒற்றைமையமாக்கலை தங்கள் ஒரே செயல்திட்டமாகக் கொண்டு முக்கால் நூற்றாண்டு போராடித்தோல்வியின் விளிம்பில் நிற்கும் இந்துத்துவ இயக்கங்களும் காந்தியையே அதற்கு குறை கூறுகின்றன.

மேலும் இந்திய மக்களை காந்தியில் இருந்து பிரிக்காமல் காங்கிரஸில் இருந்து அவர்களை பிரிக்கமுடியாது என்ற அரசியல் திட்டமும் இவர்களுக்கு உள்ளது. காந்திக்கு பாதுகாப்பு அவரது சத்தியமே ஒழிய ஊழலில் மூழ்கிய காங்கிரஸ் அல்ல என்பதை இவர்கள் புரிந்து கொள்ளவில்லை.

**தேசியத்தின் இருமைத்தன்மை**

இச்சூழலில்தான் காந்தி எண்ணிய தேசிய உருவகம் என்ன என்பதைப் பார்க்க வேண்டியிருக்கிறது. அதன் வேர்கள் என்ன, அதன் எதிர்காலச் சாத்தியங்கள் என்ன? குறிப்பாக இன்றைய சூழலில் காந்திய தேசியம் எவ்வாறு பொருள்படுகிறது?

இந்தியச் சூழலில் தேசியம் குறித்த எந்த விவாதத்தையும் இரு வகையில் பிரித்து அடையாளப்படுத்தியபின்னரே முன்னெடுக்கவேண்டியிருக்கிறது. இது அந்தந்தத் தேசியக் கருதுகோள்களின் இயல்புகளை அறியவும் அவற்றை ஒப்பிடவும் இன்றியமையாதது. அவற்றை இரண்டு இருமைகளாக உருவகித்துக்கொள்ளலாம். ஒன்று, **'கூட்டுத்தேசியம் x பிரிவினைத்தேசியம்'** என்ற முரண்பாடு. இரண்டு, **'பாரம்பரிய தேசியம் x இலட்சியவாத தேசியம்'** என்ற முரண்பாடு.

பல்வேறு இன,மத,மொழி அடையாளங்கள் கொண்ட மக்களை ஒன்றாகத்திரட்டி அவர்கள் அனைவரும் சமமான உரிமையுடன் பங்குகொள்ளும் ஒரு தேசத்தை உருவகிப்பதே கூட்டுத்தேசியமாகும். அதற்கு நேர் எதிரான விசையாக அமைவது பிரிவினைத்தேசியம். தங்கள் சாதி மதம் இனம் மொழி அடிப்படையில் பிரிந்து செல்ல வேண்டும், தனித்துச் செயல்பட வேண்டும் என்ற நோக்கம் கொண்டது பிரிவினைத்தேசியம். பெரும்பாலான நேரங்களில் இது எதிர்மறையாகவே செயல்படுகிறது. கூட்டுத்தேசியத்தை உடைத்து தன் பங்கை எடுப்பதிலேயே இதன் செயல்முறை உள்ளது.

தேசியத்தின் வேர்களை தொன்மையில் இருந்து, பாரம்பரியத்தில் இருந்து , வரலாற்றில் இருந்து உருவகித்துக்கொள்வது பாரம்பரியத்தேசியம். இவர்களின் எல்லா தேசிய அடையாளங்களும், தேசியக் கனவுகளும் சென்றகாலத்தில் இருந்தே உருவாகின்றன. ஆகவே இவர்களுக்கு வரலாறு என்பது முக்கியமான ஆதாரம். வரலாற்றுவாதத்தை உருவாக்குதலே இவர்களின் முக்கியமான கருத்தியல் செயல்பாடு. தங்களுடைய

தனித்தன்மையை, தேசிய அடையாளத்தை வரலாறு வழங்குகிறது என்பதே இந்த தேசிய உருவகத்தின் சாராம்சமான தரிசனம்.

மாறாக தேசியத்தின் எதிர்காலச் சாத்தியங்களையே அதன் நியாயங்களாக முன்வைப்பதே இலட்சியவாதத் தேசியம். எப்படி வாழ்ந்தோம் என்று பேசுவதற்குப் பதிலாக எப்படி வாழவேண்டும் என்ற கனவில் இருந்து உருவான தேசியம் அது. அதன் எல்லா தர்கங்களும் எதிர்காலத்தச் சார்ந்தவை. இலட்சியவாதமே அதன் நோக்குகளை தீர்மானிக்கிறது.

நம் சூழலில் தேசியம் குறித்து அறிவார்ந்த கோணத்தில் பேச முன்வருபவர்களேகூட தேசியம் என்பதை இவ்வாறு குண அடிப்படையில் பிரித்துப் புரிந்துகொள்ளாமல் மட்டையடியாக கருத்துச் சொல்வதைக் காண்கிறேன். கடந்த ஐம்பதாண்டுகளில் தேசியம் என்ற உருவகத்தின் பல்வேறு சாத்தியங்களைப்பற்றி மிக விரிவாகபேசும் நூல்கள் வெளிவந்துள்ளன. அவற்றை உள்வாங்காமல் போகிறபோக்கில் கருத்துச் சொல்வதனால் எந்தப் பயனும் இல்லை.

மேலே சொன்ன பிரிவினைகளுக்குள் ஒரு தொடர்பு இருப்பதைக் காணலாம். கூட்டுத்தேசியம் என்பது பெரும்பாலும் இலட்சியவாத தேசியமாகவே இருக்க முடியும். இறந்தகாலத்துக்குச் சென்றால் பல்வேறு இன,மத,மொழி குழுக்கள் ஒன்றுடன் ஒன்று போரிட்டு ஆதிக்கம் செலுத்தி ஆதிக்கத்தை எதிர்த்து கொண்டிருந்த சித்திரமே கிடைக்கும். ‘நாம் ஒன்றாக இருக்கவேண்டும்’ என ஒரு தேசியவாதி சொன்னாரென்றால் அதற்கான காரணங்களை அவர் இறந்தகாலத்தில் தேட முடியாது, எதிர்காலத்திலேயே தேட வேண்டும்.

மாறாக பிரிவினைபேசும் எவருக்கும் வரலாறு கச்சிதமாகக் கைகொடுக்கும். எந்த மதமும் இனமும் மொழியும் இனக்குழுவும் தன்னை ஒரு தனித்தேசியமாக உணரும் என்றால் அதற்கான காரணங்களை வரலாற்றில் கண்டுகொள்ளலாம். காரணம் மக்கள் பிரிந்து போரிட்ட வரலாற்றால் ஆனதே மானுட பரிணாமம்.

பிரிவினைத்தேசியம் சார்ந்த உணர்வுகளை மக்களிடையே உருவாக்குவது எளிது. காரணம் அவை எதிர்மறை உணர்வுகள். எதிரி தூலமாக கண்ணெதிரே தெரிகிறான். அவற்றைச் சுட்டிக்காட்டி கசப்புகளை மிக எளிதில் உருவாக்கலாம். ஒரு நவீன இந்திய தேசியத்தை உருவாக்க அரைநூற்றாண்டு ஆகியது. ஐந்தே வருடங்களில் பாகிஸ்தானிய

பிரிவினைத் தேசியத்தை உருவாக்க அவர்களால் முடிந்தது. ’சகமனிதன் உன் எதிரி’ என்று எங்கும் எப்போதும் மனிதர்களிடம் சொல்லலாம், நம்ப வைக்கலாம்.

அதேபோல இறந்தகாலத்தில் வரலாற்றின் காரணங்களைக் கண்டடைவதும் அதைப் பரப்புவதும் எளிது. இறந்தகலாம் என்றுமே ஒரு கனவுபூமி. அங்கே எல்லாவகை பிரமைகளுக்கும் இடமிருக்கிறது. பெருமிதங்களை, காழ்ப்புகளை, கசப்புகளை அங்கிருந்து எப்போது வேண்டுமானாலும் தோண்டிக்கொண்டுவரமுடியும். எப்படியும் தர்க்கப்படுத்தி முன்வைக்க முடியும்.

ஆனால் மக்களை அவர்களின் பேதங்களை மறந்து ஒருங்கிணைக்கச் செய்வது மிகமிகக் கடினமானது. ஏனென்றால் குழுக்களாகப் பிரிவதும் சகமனிதர்களை வெறுப்பதும் மனிதனின் இயல்புகளில் முக்கியமானவை. அவ்வியல்புக்கு எதிராக அவர்களைக் கொண்டுசெல்ல உணர்ச்சிகரமான இலட்சியவாதம் தேவை. அந்த இலட்சியவாதத்தின் சுருதி இறங்க இறங்க அதை மேலெழுப்பிக்கொண்டே இருக்கும் கடும் முயற்சி தேவை. அப்போதும்கூட எக்கணமும் அது கைநழுவிச்சென்றுவிடும் அபாயம் உள்ளது.

காந்தி இந்தச் சவாலை முன்னெடுத்த தலைவர். அவரது தேசியம் என்பது மகத்தான இலட்சியவாத கருத்துக்களின் அடிப்படையில் அமைந்தது. அவரது தேசியம் என்பது நேற்றில் இருந்து கிளைத்தது அல்ல. நாளைகுறித்த கனவுகளில் இருந்து கிளைத்தது. அவர் மக்களை அக்கனவின் அடிப்படையில் ஒருங்கிணைக்க முயன்றவர்.

எப்போது அரசியலில் காந்தி நுழைகிறாரோ அப்போதே அவருக்கு எதிர்கால இந்தியா குறித்த மாபெரும் இலட்சியக்கனவு இருந்திருக்கிறது. 1909லேயே அவர் தன்னுடைய கொள்கைவிளக்க நூலான ’ஹிந்த் ஸ்வராஜ்’ ஐ எழுதிவிட்டார். அந்நூலில் நாம் காந்தி தேசம் என்றும் தேசியம் என்றும் எதை உத்தேசித்தார் என்பதை துல்லியமாகவே வாசிக்கலாம். கடைசிவரை காந்தி அந்த இலட்சியத்தில் இருந்து பின்வாங்கவில்லை.

அந்தோனி பாரெல் தொகுத்த 'காந்தி சுதந்திரமும் தன்னாட்சியும்' [ Gandhi, Freedom, and Self-Rule, Anthony J. Parel] என்ற நூல் காந்தியின் தேசிய உருவகம் என்ன என்பதை அறிந்துகொள்ள மிகமிக முக்கியமான ஒரு வழிகாட்டி. அந்தோனி பாரெல் ஏற்கனவே காந்தியின் ஹிந்து சுயராஜ் நூலை விரிவான குறிப்புகளுடன் பதிப்பித்தவர்[ Hind Swaraj and Other Writings] ஹிந்துசுயராஜ் குறித்த ஒரு பலமுனை அலசல் என்று காந்தி சுதந்திரமும் தன்னாட்சியும் நூலைச் சொல்லலாம். ஏறத்தாழ இந்த ஆய்வில் விவாதிக்கவிருக்கும் எல்லா விஷயங்களும் அந்நூலில் சுருக்கமாக பேசபப்ட்டுவிட்டன.

**தேசியத்தின் வருகை**

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கீழைநாடுகளெங்கும் ஐரோப்பிய தேசியவாதம் ஓர் அலை போல வந்து பரவியது. ஆங்கிலம் கற்ற அனைத்து நடுத்தர வற்கத்தினரும் அந்தக் கனவால் தூக்கிச்செல்லப்பட்டார்கள். ஐரோப்பா உருவாக்கிக்கொண்ட நவீன தேசிய உருவகம் அவர்களை பிறநாடுகள் மீது அதிகாரம் செலுத்துபவர்களாகவும் செல்வ வளம் மிக்கவர்களாகவும் ஆக்குவதை அவர்கள் கண்டார்கள். ஆகவே அத்தகைய ஒரு தேசிய உருவகத்தை தாங்களும் அடைய விரும்பினார்கள்.

உதாரணமாக, ஹிட்லரின் மெய்ன் காம்ப் என்ற நூல் அதுவெளியான சில வருடங்களுக்குள்ளாகவே ப.ராமசாமி என்ற தேசியவாதியால் தமிழில் மொழியாக்கம் செய்யப்பட்டு மலேசியாவில் கொலாலம்பூரில் இருந்து வெளியாகியது. அன்று ஹிட்லர் சோர்ந்துகிடந்த ஒரு நாட்டுக்கு தேசியவாதம் மூல உணர்வூட்டி எழுப்பிய வீரநாயகனாகவே கருதப்பட்டார். இத்தாலிய தேசியவாதிகளான மாஜினி, கரிபால்டி போன்றவர்கள் இந்திய சிந்தனையில் ஆழமான பாதிப்பை உருவாக்குபவர்களாக இருந்தார்கள் அன்று.

ஐரோப்பிய தேசியவாதத்தை அதன் வெற்றிகளைக்கொண்டு மட்டுமே மதிப்பிடும்போக்கு என இதைச் சொல்லலாம். அதன் வரலாற்றுக்காரணங்களும் அதன் விளைவுகளும் ஆராயப்படவில்லை. அந்த வகையான தேசியமே ஒரே வழி என்று நம்பப்பட்டது. ஒருவகையில் அந்த நவீன ஐரோப்பிய தேசியக் கருத்தாக்கம் வழியாகத்தான் கீழைநாடுகளில் நவீன அரசியலே தோன்றியது.

இந்தியாவை எடுத்துக்கொண்டால் இங்கே இரண்டுவகையான ஆட்சிகள் இருந்தன. ஒன்று இந்தியாவின் பெரும்பாலான பகுதிகளில் நிலவிய மன்னராட்சி. இரண்டு பிற இடங்களில் பிரிட்டிஷாரின் நேரடி ஆட்சி. ஆனால் அதுவும்கூட மன்னராட்சியே. இங்கிலாந்து ராணியின் ஆட்சி. என்ன வேறுபாடு என்றால் மன்னராட்சியில் நிலப்பிரபுத்துவ மதிப்பீடுகள் ஆளும் கருத்தியலாக இருந்தன. ஆசாரங்கள் மரபுகள் மற்றும் நம்பிக்கைகளே ஆட்சியை நிறுவி காத்தன. பிரிட்டிஷ் இந்தியாவில் பிரிட்டிஷாரின் ஆயுத வலிமையும் அதன்மூலம் அவர்கள் அளித்த சட்டத்தின் ஆட்சிக்கு இந்திய நடுத்தர வர்க்கம் அளித்த ஆதரவும் அடிப்படையாக அமைந்தன.

இரு ஆட்சியிலும் உள்ள பொதுவான அம்சம் என்னவென்றால் குடிமைச்[ சிவில்] சமூகத்துக்கு அதிகாரத்தில் பங்களிப்பே இல்லை என்பதுதான். மக்கள் அரசியல்படுத்தபடவில்லை. தங்கள் சொந்த வாழ்க்கையின் மாறாத சக்கரச்சுற்றலில் அவர்கள் அப்படியே நூற்றாண்டுப்பழைய வாழ்க்கையை வாழ்ந்தனர். குடிமைச்சமூகத்தில் இருந்து கிளைத்த அரசியல்சமூகம் ஆட்சியுடன் ஒட்டிக் கொண்டு எல்லா நலன்களையும் அனுபவித்தது. பதிலுக்கு ஆட்சிக்கான அனுமதியை அது குடிமைச்சமூகத்தில் உருவாக்கி அளித்தது.

ஒருநவீன தேசியம் குடிமைச்சமூகத்தை அரசியல்படுத்தும் என்றும் அதன் மூலம் உருவாகும் அரசியல் மாற்றம் வலுவான தேசிய அரசை உருவாக்கும் என்றும் அன்றைய நடுத்தர வர்க்கத்தில் உள்ள சிலர் எண்ணியமையாலேயே ஐரோப்பிய நவீன தேசியவாதம் இங்கே கொண்டுவரப்பட்டது. அன்று உருவாகி வந்த இதழியல், பொதுக்கூட்டம் போன்ற நவீன ஊடகங்கள் அதற்கு உதவின. ஆகவே அது வேகமாக இந்தியாவில் பரவியது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்திய அச்சு ஊடகங்களில் எல்லாம் எவரேனும் நவீன ஐரோப்பிய தேசியத்துக்காக குரல்கொடுத்திருப்பதைக் காணலாம்.

அத்துடன் ஏற்கனவே நவீனமயமாதல் இந்தியாவில் சிறிய அளவில் ஆரம்பித்தாகிவிட்டிருந்தது. அதை பிரிட்டிஷார் அவர்களின் சொந்த நிர்வாக வசதிக்காக உருவாக்கினார்கள். தரப்படுத்தப்பட்ட பொதுக்கல்வி, போக்குவரத்து வசதி, தகவல்தொடர்பு வசதி ஆகியவை இந்தியாவின் பிரிட்டிஷ் பகுதிகளில் நவீனமயமான சமூகம் ஒன்றை மெல்லமெல்ல கட்ட ஆரம்பித்தன. அத்துடன் தொழிற்சாலை உற்பத்திமுறை உருவாகி

தொழிலாளர்வர்க்கம் என்ற ஒருங்கிணைக்கப்பட்ட உழைப்பாளி அமைப்பு உருவாகியது. இவையனைத்துமே நவீன தேசியத்தை நோக்கி தள்ளக்கூடிய அம்சங்கள்.

**இரண்டு வகை தேசியங்கள்.**

ஐரோப்பிய நவீன தேசியத்தில் இருந்து இரண்டு வகையான தேசிய உருவகங்கள் உருவாகி வந்தன என்று சொல்லலாம். ஒன்று, தாக்கும்தன்மை கொண்டதும், ஒற்றை அதிகார மையம் கொண்டதும், ஒற்றைப்பண்பாட்டை தன் அடிப்படையாக வலியுறுத்துவதுமான மையத்தேசியம். இறுக்கமான கட்டமைப்பு கொண்ட இந்த தேசியம் தன்னை ஒரு இயந்திரமாக உருவகித்துக்கொண்டது. இந்த தேசிய உருவகமே பதினெட்டாம் நூற்றாண்டில் சமூகம் மனம் இயற்கை பிரபஞ்சம் எல்லாவற்றையுமே இயந்திர விதிகளின்படி உருவகித்த ஐரோப்பிய இயந்திரவியல் காலகட்டத்தின் சிருஷ்டி எனலாம்.

வலுவான மையமே இதன் அடிப்படை. அந்த மையத்தை வலுப்படுத்தும் கூறுகளினால் ஆனதே இதன் ஒட்டுமொத்தக் கட்டமைப்பும். இந்த தேசியம் எப்போதுமே தீவிரமான இலக்குகள் கொண்டது. உலகை வெல்லுதல் முதல் ஐரோப்பாவில் முதலிடம் பிடித்தல் வரை. அந்த இலக்குக்கு ஏற்பவே அதன் எல்லா கூறுகளும் வடிவமைக்கப்பட்டிருக்கும். அந்த இலக்குக்கு ஒவ்வாத எதுவுமே தேவையற்றவையாக கருதப்படும். எப்படி ஓர் இயந்திரம் செயலாற்றலுக்காகவே அதன் வடிவத்தை அடைந்திருக்கிறதோ அப்படி செயலாற்றும் கூறுகளினால் மட்டுமே ஆனது இது.

இதற்கு இன்று காட்டப்படும் மிகச்சிறந்த உதாரணம் ஹிட்லரே. ஆனால் ஐரோப்பாவில் எல்லா நாடுகளிலும் எப்போதும் ஏதேனும் ஓர் அளவில் இந்தவகையான தேசியம் இருந்திருக்கிறது — பிரிட்டனைத்தவிர. பெரும்பான்மையான ஐரோப்பிய நாடுகளை நவீன காலகட்டத்துக்கு கொண்டுவந்தவர்கள் இந்த வகையான தேசிய உருவகத்தை மனதில் கொண்டவர்களே. உதாரணம் நெப்போலியன், பிஸ்மார்க், கரிபால்டி.

வலிமையான மையம் தேவை என்ற காரணத்தாலேயே இந்த வகையான தேசியம் சர்வாதிகார அரசமைப்பையே இயல்பாக நாடக்கூடியது.. பெரும்பாலான ஐரோப்பிய நாடுகளில் சர்வாதிகார ஆட்சி வலுவாக

இருந்திருக்கிறது. அதற்கு வாய்ப்பே இல்லாதிருந்த நாடு என்றால் பிரிட்டன் மட்டுமே. ஹிட்லரும் முசோலினியும் இந்த மையத்தேசியக் கருத்தாக்கத்தை பயன்படுத்தியே ஆட்சியை பிடித்தார்கள். இவ்விருவருடைய எழுத்துக்களிலும் இத்தகைய தேசியத்தை விளக்கக்கூடிய, அறைகூவக்கூடிய ஏராளமான வாதங்கள் குவிந்து கிடக்கின்றன.

இந்த தேசியம் மைய அரசில் வரம்பில்லா அதிகாரத்தைக் குவிக்கக்கூடியது. ஆகவேதான் சர்வாதிகாரிகளை இது உருவாக்குகிறது. ஹிட்லரும், முசோலினியும், ஸ்டாலினும், முஸ்தபா கமால் பாஷாவும் இதன் சிருஷ்டிகளே. ஹிட்லர் முதலியோர் இவ்வகை தேசியத்தை பயன்படுத்தி உருவாக்கிய பேரழிவுக்குப் பின்னரும்கூட ஐரோப்பாவில் சார்ல்ஸ் டி கால்[பிரான்ஸ்] , பிரான்ஸிஸ்கோ பிராங்கோ [ஸ்பெயின்] மார்ஷல் டிட்டோ [யூகோஸ்லாவாகியா] போன்ற சர்வாதிகாரிகள் ஆட்சியில் நீடித்தனர், புதிதாக உருவாகியும் வந்தனர். இன்று ஐரோப்பா மேல் தோற்றத்தில் இந்தவகையான தேசிய உருவகத்தைவிட்டு வெளியே நகர்ந்துவிட்டதாக தோன்றினாலும்கூட இது ஐரோப்பிய உளவியலில் மிக வலிமையாக இருந்துகொண்டிருக்கும் ஒன்றுதான்.

இந்த மையத்தேசியத்தின் முக்கியமான சிறப்பியல்பு என்னவென்றால் இது மன்னராட்சிக்கு எளிதான மாற்றாக அமைய முடியும் என்பதே. மன்னராட்சிக்கு அடிப்படையாக இருக்கும் தேசிய பெருமிதம், அது சார்ந்த பண்பாட்டுக்கூறுகள் ஆகிய அனைத்தையும் இது அப்படியே பயன்படுத்திக்கொள்ள முடியும். பலநாடுகளில் மன்னராட்சி அப்படியே நவீன மையத்தேசியமாக உருமாற்றம் பெற்றது. மிகச்சிறந்த உதாரணம் ஜப்பான்.

விரைவாக முடிவெடுக்கும் சாத்தியம், ஈவிரக்கமில்லாமல் மாற்றங்களைக் கொண்டுவரும் தன்மை, முரண்பாடுகளை அடக்குமுறை மூலமே இல்லாமல்செய்யும் போக்கு ஆகியவற்றின் மூலம் இத்தகைய தேசியம் மிக எளிதாக கண்முன் தெரியும் பல சமூகச் சிக்கல்களை மேலோட்டமாகக் களைந்து பொருளாதார முன்னேற்றத்தையும் சமூக ஒற்றுமையையும் காட்ட முடியும். அந்த சர்வாதிகாரி உண்மையான மக்கள் நலம்நாடுபவராக இருந்தால் அந்த மாற்றங்கள், அதன் அழிவுகளுடனேயே, நல்ல விளைவுகளை அளிக்க முடியும். அதற்கு இன்றும் முஸ்தபா கமால் பாஷாவே உதாரணமாகக் காட்டப்படுகிறார். துருக்கி இன்றும் இஸ்லாமிய

சீரழிவுப்போக்குக்கு செல்லாமல் வளமான அமைதியான நாடாக நீடிப்பது அவர் உருவாக்கிய வலிமையான அடிப்படைகளினால்தான்.

இந்த மையத்தேசியம் தாக்கும் தன்மை கொண்டது. ஏனென்றால் இது உருவாக்கும் மையம் ஒரு செயல்நோக்கம் இல்லையேல் நீடிக்காது. அச்செயல்நோக்கம் உணர்வுபூர்வமானதாக இருக்கவேண்டுமென்றால் எளியவழி தேசிய எதிரிகளை கற்பனைசெய்து கொள்வதே. அந்த எதிரிக்கு எதிரான போரிலேயே உறுதியான மையத்தையும் அதை காத்து நிற்கும் அமைப்பையும் சாதாரணமாக உருவாக்க முடியும்.

அல்லது 'உலகைவெல்லும்' கனவு தேவை. தேசிய அடையாளத்தை ஊதிப்பெருக்கி, உலகின் தலைமைக்குடிகளாக ஒவ்வொருவரையும் கருதிக்கொள்ளச் செய்து, அதன் மூலம் உலகைக் கைப்பற்றும் கனவை ஒவ்வொரு மனதிலும் ஊட்டி, அதன் வழியாக அவர்களை மையம் நோக்கி திரட்ட முடியும். ஐரோப்பிய நவீன மையத்தேசியம் என்பது இவ்விரு சாத்தியங்களில் ஏதேனும் ஒன்றை அல்லது இரண்டையும் பயன்படுத்திக்கொண்டதாகவே இருக்க முடியும். ஹிட்லர் முதலில் தேசிய எதிரிகளை எதிர்கொள்வதற்காக மையத்தேசியத்தை முன்வைத்தார். பின் உலகை வெல்லும் கனவை உருவாக்கினார்.

மையத்தேசியத்தின் பிதாமகர் பிளேட்டோ. தகுதியான ஒரு உட்சமூகத்தால் தேர்வுசெய்யப்பட்டு தத்துவ வாதியால் தலைமை தாங்கப்படும் ஒரு முற்றதிகார அரசாங்கமே அறிவுபூர்வமானது என்று பிளேட்டோ என்ணினார். அவரது குடியரசு உலகம் முழுக்க உள்ள முற்றதிகார ஆட்சியாளார்கள் அனைவருக்குமே ஆதர்சமாக இருந்திருப்பதைக் காணலாம். உதாரணமாக ருஷ்யாவில் ஸ்டாலின் அனைத்ததிகார ஆட்சியின்போது 'தத்துவ வாதியான ஆட்சியாளன்' பிளேட்டோ கண்ட கனவு ஸ்டாலினால் நிறைவேறுகிறது என்று பிரச்சாரம்செய்யப்பட்டது.

ஸ்பெயின், பிரான்ஸ், பிரிட்டன், டென்மார்க், பெல்ஜியம் என எல்லா ஐரோப்பிய நாடுகளிலும் மையத்தேசியம் இருந்திருக்கிறது. அதுதான் காலனியாதிக்கமுறையை உலகம் மீது ஏற்றியது. உலக நாடுகளைச் சுரண்டி மேலும் மேலும் செல்வம் சேர்த்தது. ஐரோப்பா நவீனமயமானது இந்த மையத்தேசியங்கள் உருவாக்கிய செல்வ வளம் மூலமே. விளைவாக அங்கே கல்வி தொழில்நுட்பம் ஆகிய இரண்டும் வளர்ந்தன. அந்நாடுகளால் சுரண்டப்பட்ட நாடுகளில் உள்ள படித்த மக்கள் இந்த வெற்றிகளை மட்டுமே

கண்டார்கள். இவ்வெற்றிகளுக்குக் காரணமான மையத்தேசிய உருவகத்தின் மீது ஆழமான நம்பிக்கை கொண்டார்கள்.

ஆனால் ஒரு மையத்தேசியம் பிற மையத்தேசியங்களுக்கு எதிரானதாகவே இருக்க முடியும். ஊன்உண்ணி மிருகங்கள் மந்தையாவதில்லை. ஆகவேதான் இரு உலகப்போர்கள் உருவாயின. உலக வளங்களை பங்கிடுவதில் மையத்தேசியங்கள் நடுவே உருவான பூசலே அந்த போர்களையும் பேரழிவுகளையும் உருவாக்கியது. அதை அந்த நாட்டு அறிஞர்கள் உணர்ந்தபோதிலும்கூட மையத்தேசிய கனவை சுமந்தலைந்த பிர உலக நாட்டு அறிவுஜீவிகள் அனேகமாக உணரவில்லை.

மேலும் மையத்தேசிய உருவகம் மேலும் இருபது வருடங்கள் ஐரோப்பாவில் ஆட்சி செலுத்தியது. 1960 களுக்குள் ஐரோப்பாவில் இருந்த பெரும்பாலான மையத்தேசியங்கள் சரிந்தன. உலகளாவிய நம்பிக்கையை ஏற்படுத்தியிருந்த கடைசி மையத்தேசிய அரசு ஸ்டாலினின் ருஷ்யாதான். 1954ல் குருஷேவ் பதவிக்கு வந்து ஸ்டாலினின் கொடுமைகள் வெளியே தெரிய ஆரம்பித்ததும் அந்த கனவும் சரிந்தது. ஆனாலும் அறிவுஜீவிகளில் ஒரு சாராரிடமும் மக்களில் கணிசமானவர்களிடமும் எப்போதும் மையத்தேசியம் என்ற கனவு எப்போதும் இருந்துகொண்டுதான் இருக்கிறது.

மையத்தேசியம் சார்ந்த கனவு யாரிடம் இருக்கிரது என்று பார்த்தால் உலகமெங்கும் சில பொதுத்தன்மைகள் உள்ளன.

1. மரபுகளை அப்படியே பேணவேண்டும் என எண்ணுகிற பாரம்பரியவாதிகள் இயல்பாகவே மையத்தேசியத்தை நோக்கிச் செல்கிறார்கள். அவர்களைப்பொறுத்தவரை மேலான வாழ்க்கை என்பது இறந்த காலத்திலேயே இருக்கிறது. பழைய பெருமையை மீட்பது என்பது இவர்களில் எப்போதும் இருக்கும் கனவு. அப்பெருமையை இழக்கக் காரணமான வரலாற்று எதிரிகள் அவர்கள் முன் எப்போதும் இருப்பார்கள்.

2.தேசியத்தை அரசியல், பொருளியல் ஆதிக்கத்துக்கான கருவியாகக் காண்பவர்கள் மையத்தேசியமே அதற்குச் சிறந்தது என்று எண்ணுகிறார்கள். மையத்தேசியம் இயல்பாகவே ராணுவத்தன்மை கொண்டது. ஒரு இயந்திரம் போல விரைவானது, கச்சிதமானது, தாக்கும்தன்மை கொண்டது. பிறநாடுகளை வெல்லத்தேவையான சுயபெருமிதக் கருத்தியலை அதனால் எளிதில் உருவாக்கிக் கொள்ள முடியும்.

3. தன்னுடைய சொந்த அறிவுத்திறன் மற்றும் நிர்வாகத்திறனில் அபரிமிதமான மதிப்பு கொண்டுள்ள அறிவுஜீவிகள் மையத்தேசியத்தை விரும்புகிறார்கள். சமூகத்தில் தாங்கள் உத்தேசிக்கும் மாற்றங்களை மையத்தேசியம் அளிக்கும் முற்றதிகாரம் மூலம் மிக எளிதாக மக்களிடையே பரப்பி சமூகத்தை தலைகீழாகத்திருப்பிவிடலாமென இவர்கள் நம்புகிறார்கள்.

4.சமூக இயக்கம் குறித்த இயந்திரவாதப் புரிதல்கள் உள்ள கோட்பாட்டாளர்கள். இவர்கள் சமூகத்தை திட்டவட்டமாக பகுத்து பிரித்து ஆரய்ந்து உறுதியான புரிதல்களை அடைய முடியும் என நம்புகிறார்கள். ஆகவே இவர்களுக்கு பழுதில்லாத செயல்பாடுள்ள தேசிய அமைப்பு தேவைபப்டுகிறது. அது மையத்தேசியமே.

ஐரோப்பாவில் உருவான இரண்டாவது வகையான தேசிய உருவகம் தாராளப்போக்குள்ள [லிபரல்] தேசியம். தாராளத்தேசியத்தின் வேர்களும் ஐரோப்பிய மறுமலர்ச்சியின்போதே உருவாகி வந்தவைதான். தாராளவாதம் என்பது ஐரோப்பிய சிந்தனையின் ஒரு முக்கியமான அடித்தளம்.

ஐரோப்பிய சிந்தனையில் ஆழமான பாதிப்பைச் செலுத்திய தனிமனித உரிமை என்ற கருதுகோளின் சிருஷ்டி இது. இன்றும் ஐரோப்பிய- அமெரிக்க சிந்தனையில் அடிப்படை இயக்க விசையாக இது உள்ளது.

தாராளவாதம் மேலைச்சிந்தனையில் அறிவொளிக்காலம் [Age of Enlightenment] முதல் ஆரம்பித்தது என்று சொல்வது மரபு. ஆனால் அதன் வேர்கள் கிரேக்க சிந்தனையில் உள்ளன. அரிஸ்டாடிலின் உலகியல்வாதம், ஞானத்தை ஒரு குறிப்பிட்டவகையான அறிதல்முறைக்குள் நிறுத்தாமல் எலலா அறிதல்களையும் தொகுத்து சிறந்ததை எடுக்கவேண்டும் என வாதிடும் தெரிவுவாதம் [ Eclecticism] பிரபஞ்சமும் இயறகையும் அளிக்கும் இயல்பான அறிவுடன் மனிதன் தன் சிந்தனையை பொருத்திக்கொள்ளவேண்டும் என வாதிடும் இயல்பறிவுவாதம் [ Stoicism] போன்றவற்றை இச்சிந்தனைகளின் அடிப்படைகளை அமைத்தவை என்கிறார்கள்.

பதினாறாம் நூற்றாண்டுவரை ஐரோப்பாவில் இருந்து வந்த இரண்டு மையக்கருத்தோட்டங்களுக்கு எதிராக அவை உருவாயின. ஒன்று பிறப்பிலேயே மன்னர்களுக்கும் பிரபுக்களுக்கும் மண்ணையும்

மக்களையும் ஆளும் 'புனித உரிமை'கள் உள்ளன என்ற எண்ணம்.[ Divine Right]. இரண்டு, ஒரு மதநம்பிக்கையாளனின் ஆத்மா தேவாலயத்துக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறது என்ற கருத்து.

அவற்றை எதிர்த்து பதினாறாம் நூற்றாண்டின் இறுதியில் ஐரோப்பிய நாடுகளில் உருவானதே அறிவொளிக்காலம் என்று சொல்லலாம். அறிவொளிக்காலம் தனிமனிதன் சுதந்திரமான ஆன்மீகத்தேடலுக்கும் , தன் ஆளுமையை முழுமைசெய்துகொள்ளுதலுக்கும் உரிமை கொண்டவன் என வாதிட்டது. ஒவ்வொரு தனிமனிதனும் கரணிய ஞானம் [Reason] கொண்டவன், அவனது செயல்களுக்கு அதன் மூலம் அவனே பொறுப்பேற்றுக்கொள்ள வேண்டும், சமூகம் என்பது அத்தகைய சுதந்திரமான தனிமனிதர்களால் ஆனதாக இருக்கவேண்டும், அரசு அவர்களின் கரணியஞானத்தின் மலர்தலுக்கு இடமளிப்பதாக இருக்கவேண்டும் என்றது.

கரணிய ஞானத்தை மானுட சாரமாக முன்வைத்தவர் இமானுவேல் காண்ட். அறிவொளிக்காலத்தின் ஒரு கட்டமாக கரணியஞானக் காலகட்டம் [Age of Reason] உருவாகி வந்தது. அதிலிருந்து பின்னர் பகுத்தறிவுக்காலகட்டம் [Age of Rationality] உருவாகியது. நவீன அறிவியல் சிந்தனைகளுக்கான தத்துவ அடிப்படையை இதுவே உருவாக்கி அளித்தது. மார்க்ஸியம் உட்பட உள்ள சமூகவியல், அரசியல் கோட்பாடுகளுக்கு விதைநிலமாக அமைந்தது.

பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவரான பிரிட்டிஷ் தத்துவசிந்தனையாளர் ஜான் லோக் [John Locke] தாராளவாதத்தின் தந்தை என்று சொல்லப்படுகிறார். சமூகநலனால் மட்டுமே தனிமனித உரிமை எல்லை வகுக்கப்படவேண்டும் என்பதே அவரது சிந்தனையின் சாரம் எனலாம். சமூகம் என்பது சுதந்திரமான தனிமனிதர்கள் தங்கள் பொதுநன்மைக்காக உருவாக்கிக்கொள்ளும் ஓர் அமைப்பே.

தனிமனிதனின் மனத்தைப்பற்றிய லோக்கின் கருத்துக்கள் விரிவான சிந்தனைகளுக்கு தளம் அமைத்தன. எந்த தனிமனிதனும் சமூகத்தின் சிருஷ்டியே என்று லோக் சொன்னார். இன்றுவரை மேலைச்சிந்தனையின் ஒரு முக்கியமான கருத்தோட்டமாக இது உள்ளது. ஒவ்வொரு மனிதனும் 'வெற்றுத்தாளாக' [tabula rasa] பிறக்கிறான் என்றும் சூழலே அவனது எல்லா சிந்தனைகளையும் ஆளுமையின் தனித்தன்மையையும் உருவாக்குகிறது என்று அவர் சொன்னார். இது ஆதிபாவம் முதலிய கிறித்தவ சிந்தனைகளுக்கு மாற்றாக அமைந்தது.

தனிமனிதனின் ஆளுமையை முழுமையாக விரிவடையச்செய்வதாக அமையும் ஒரு சமூக அமைப்புக்காக லோக் வாதாடினார். ஆகவே சுதந்திரம் என்பதே சமூகத்தின் இலட்சியமாக இருக்கவேண்டும். ஒவ்வொரு தனிமனிதனுக்கு சமூகத்துடன் ஒரு கடமைப்பாடு உள்ளது. ஒரு சமூகமாக மனிதர்கள் கூடி வாழ்வதென்பது அச்சமூகத்தின் அனைத்து உறுப்பினர்களும் பொதுவாகவே கொள்ளும் ஒரு புரிந்துணர்வின் அடிப்படையிலேயே ஆகும். அதில் அச்சமூகத்தின் கூட்டுநலன்களுக்கு எதிராக இல்லாமலிருப்பத்தான் அதன் சாரம்.

அந்த கடமைப்பாட்டை மீறாதவரை அவனுடைய தனிமனித உரிமைகளை சமூகம் தடுக்கக் கூடாது. ஒவ்வொரு தனிமனிதனின் அனுமதியுடன்தான் சமூக அதிகாரமும் அரசாங்கமும் உருவாக்கப்படவேண்டும் என்று லோக் வாதிட்டார். இதை அவர் ஆளப்படுபவனின் அனுமதி [consent of the governed.] என்றார். நவீன ஜனநாயகத்தின் அடிபப்டை விதி என்பது இதுவே. தனிமனிதர்கள் அளிக்கும் ஒட்டு மொத்த அனுமதியினாலேயே சமூக விதிகள் நிலைநிற்கின்றன, அவற்றுக்கு எந்த புனிதமும் இல்லை என்ற இச்சிந்தனை மேலைநாட்டு அரசியலில் மிகப்பெரிய பாதிப்புகளைச் செலுத்திய ஒன்றாகும்.

தனிமனித அடிப்படை உரிமைகள் இயற்கையே மனிதனுக்கு அளித்தவை என்று இச்சிந்தனைகள் வாதிட்டன. ஆகவே சுயமாகச் சிந்திக்கவும் தன் விருப்பபடி வாழ்க்கையை அமைத்துக்கொள்ளவும் அவனுக்கு உரிமை இருக்கிறது. அது பிறர் உரிமையை தடுக்காதவரை அதன் மீதான கட்டுப்பாட்டை விதிப்பது இயற்கைக்கு மாறான செயல் என்றனர் இவர்கள். இன்றுவரை இந்திய அரசியல் சட்டம் உட்பட அனைத்திலும் ஆழமான பாதிப்பைச் செலுத்தியிருக்கும் கருத்துநிலை இது. அடிபப்டை உரிமைகள் என்று நம் அரசியல்சட்டம் இதையே சொல்கிறது

ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக்காலம் இதுசம்பந்தமாக மிக விரிவான விவாதங்கள் நடந்துள்ளன. சிந்தனைச்சுதந்திரம், கருத்து தெரிவிக்கும் சுதந்திரம், ஆன்மீக சுதந்திரம், இன்பநாட்டத்துக்கான சுதந்திரம் ஆகியவற்றை சமூகம் தன் உறுப்பினர்களுக்கு உறுதிப்படுத்த வேண்டும் எனப்பட்டது. பிரெஞ்சுப்புரட்சியின் அடிப்படையாகக் கூறப்பட்ட சுதந்திரம் சமத்துவம் சகோதரத்துவம் ஆகியவையும் சரி அமெரிக்க புரட்சியின்

அடிபப்டை வார்த்தைகளான பலரிலிருந்து ஒன்று [ E pluribus unum] ஆகியவை நவீன தாராளவாதச் சிந்தனைகளின் கவித்துவ வெளிப்பாடுகளே.

லோக்கின் சிந்தனைகளையே வால்ட்டேர் ரூஸோ போன்றவர்கள் பிரான்சில் வளர்த்தெடுத்தார்கள். அதுவே பிரெஞ்சுப்புரட்சிக்கும் அமெரிக்கப் புரட்சிக்கும் வழிவகுத்தது. அச்சிந்தனைகளை உலகமெங்கும் கொண்டு செல்வதற்கு பிரெஞ்சு,அமெரிக்கப் புரட்சிகளைப் பற்றிய கிளர்ச்சியூட்டும் எழுத்துக்கள் காரணமாயின.

இந்தியாவில் ஆங்கிலக் கல்வி பரவலானபோது கூடவே ஆங்கில இலக்கியம் வழியாக தாராளவாதச் சிந்தனைகளும் அறிமுகமாயின. குறிப்பாக அக்கால மாணவர்களில் ஷெல்லி உருவாக்கிய பாதிப்பு மிக ஆழமான ஒன்று. இந்தியப் பல்கலைகழகங்களில் தத்துவதில் மிக அதிகமாக ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டவர் லோக் தான் என்று சொல்லப்படுகிறது. பிரிட்டிஷ் தாராளவாதம் எந்த அளவுக்கு இந்திய சிந்தனைகளை தொடர்ந்து பாதித்தது என்பதற்கான உதாரணமாக இதைச் சொல்லால்லாம்.

லோக் ஐரோப்பாவில் நிரூபணவாதத்துக்கான அடிப்படைக்கோட்பாடுகளை அமைத்தவர். தாராளவாத நோக்கு என்பது பத்தொன்பதாம் நுற்றாண்டின் அறிவியல் நோக்காக இருந்த நிரூபணவாதத்தில் இருந்து பிரிக்க முடியாத ஒன்றாகும்.தா¡ராளவாதம், தனிமனித உரிமை, கரணிய நோக்கு ஆகியவை ஒரே கருத்தின் மூன்று பட்டைகள் என்றும் சொல்லல்லாம்.

தாராள அரசை ஆதரிப்பவர்கள் எத்தகைய இயல்புடையவர்கள் என்பதை பொதுவாக கீழ்க்கண்டவாறு வகுக்கலாம்

1. நிரூபண வாத அறிவியல் நோக்கில் ஆழமான நம்பிக்கை கொண்டவர்கள். எந்த ஒரு விஷயத்தையும் தெளிவாக புறவயமாக நிரூபித்தாலொழிய ஏற்க மறுப்பவர்கள். ஆகவே இவர்கள் மரபு சார்ந்த எந்த விஷயத்தையும் ஏற்பதில்லை.மரபான அதிகாரத்தை உருவாக்கும் நம்பிக்கைகள் ஆசாரங்கள் படிமங்கள் எதிலும் இவர்கள் ஒன்றுவதில்லை. நிரூபணவாதம் என்பது ஓர் உண்மையை பகுப்பாய்வுசெய்வதற்கான தனிமனிதனின் உரிமையைச் சார்ந்தே செயல்படுவது. தனிமனித அறிவுக்கு உண்மையை பகுப்பாய்வு செய்து அறியும் ஆற்றல் உண்டு என்ற நம்பிக்கையின் அடிப்படையில் எழுவது. ஆகவே அதை தனிமனித சுதந்திரம் என்பதில் இருந்து பிரிக்க முடியாது

2. பன்மைத்தன்மையிலும் உரையாடலில் நம்பிக்கை கொண்ட இலட்சியவாதிகளான சிந்தனையாளர்கள். ஞானம் என்பது ஒற்றைப்படையானதல்ல என்றும் வாழ்க்கையின் எல்லா தளங்களிலும் எல்லாவகையான மக்களிடமும் ஏதோ ஒரு வகையில் ஞானம் உள்ளது என்றும் எல்லாவகையான அறிதல்களும் ஏதேனும் வகையில் முக்கியமானவையே என்றும் இவர்கள் நம்புகிறார்கள். அத்தகைய பலவகையான ஞானங்கள் ஒன்றுடன் ஒன்று உரையாடுவதன் மூலமே மானுட ஞானம் என்பது உருவாகிறது என்று நம்புகிறார்கள். அதற்கான சிறப்பான சூழல் உருவாவதர்கு தாராள அரசே உதவிகரமானது என்று இவர்கள் நினைக்கிறார்கள்.

3 மானுட அறிதலின் எல்லைகளைப் பற்றிய பிரக்ஞை உள்ள அறிவுஜீவிகளும் தாராள அரசையே ஏற்கிறார்கள். நாம் அறிந்தவற்றை மட்டும் வைத்து எல்லாவற்றையும் மதிப்பிட்டுவிடமுடியாது என்றும் வரலாற்றின் இயல்பான பரிணாமப்போக்குக்கு தடையாக நம் குறுகிய ஞானம் ஆகிவிடலாகாது என்றும் எண்ணுகிறார்கள். ஆகவே எல்லாவகையான சாத்தியங்களுக்கும் இடமிருக்கக் கூடிய, எது வரலாற்றின் தேவையோ அது நிகழ்வதற்கான வாய்ப்பளிக்கக்கூடிய ஓர் அரசே தேவை என இவர்கள் எண்ணுகிறார்கள்.

4. மனிதனின் கடைசிக்குறிக்கோள் இவ்வுலக இன்பமே என்று எண்ணுகிறவர்களுக்கும் தாராளவாத அரசே உவப்புடையதாக இருக்கிறது. மனிதனை ஏதேனும் ஒரு இலட்சியத்திற்காக உருவாக்கப்பட்டவன் என்றோ ஏதேனும் ஒரு கருத்துக்காக அவன் வாழவும் சாகவும் விதிக்கப்பட்டவன் என்றும் இவர்கள் நம்புவதில்லை. இன்பநாட்டம் என்பது மனிதனின் ஆதார இயல்பு. அதற்கான சமூக அனுமதியை அவனுக்கு முழுமையாக அளிப்பது தாராள அரசே என்று இவர்கள் நினைக்கிறார்கள்.

தாராளவாத அரசு என்பது இன்று உலகமெங்கும் பரவலாக உள்ள அரசு வடிவம் எனலாம். நலம்நாடி அரசும் தாராளவாத அரசும் ஒன்றே எண்ணம் உலகமெங்கும் நிலவுகிறது. ஜனநாயகம் தாராளவாதம் இரண்டும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள் என்ற எண்ணமும் எங்கும் உள்ளது. ஆகவே நடைமுறையில் எபப்டி இருந்தாலும் பெரும்பாலான அரசுகள் தங்களை தாராளவாத அரசுகளாகச் சொல்லிக்கொள்ள வேண்டிய நிலையில் உள்ளன.

அதுவே மானுடம் கண்ட அரசு வடிவங்களில் ஆகச்சிறந்தது என்ற எண்ணம் இன்று உலகம் முழுக்கவே வலுவாக உள்ளது. அந்த அரசை மேலும் தாராளமானதாக ஆக்க என்ன செய்யலாம் என்ற அளவிலேயே அரசியல் சிந்தனைகள் இன்று முன்னெடுக்கப்படுகின்றன. பிறிதொருவகையிலான அரசுக்கான தேட்டம் எங்குமே இல்லை என்றே சொல்லவேண்டும்.

ஐரோப்பிய சிந்தனையில் எப்படி அரசு என்ற கருத்துருவம் படிப்படியாக வளர்ந்து உருவாகி வந்ததோ அதைப்போலவே, அதற்கிணையாகவே அரசின்மை [Anarchism ] என்ற கருத்துருவமும் வளர்ந்துருவாகி வந்திருப்பதைக் காணலாம். மேலான அரசாங்கங்கள் குறித்த கனவுகளைப் போலவே அரசில்லா சமூகங்களைப்பற்றிய கனவுகளும் தொடர்ந்து பரிணாமம் கொண்டிருக்கின்றன

இதில் கவனிக்க வேண்டியதென்னவென்றால் அரசு என்ற கருத்துருவம் வளர்ந்து வருவதற்கு அரசின்மை என்ற கருத்துருவம் பெரும் பங்களிப்பை ஆற்றியிருக்கிறது என்பதே. அரசு என்ற கருத்தின் எல்லைகள், சாத்தியங்கள், எதிர்மறைக்கூறுகள் ஆகியவற்றை அரசின்மை என்ற கருதுகோள்தான் தொடர்ச்சியாக மறுபரிசீலனைசெய்யவைத்தது. இன்று ஐரோப்பாவில் உள்ள தாராளவாத அரசுகள் குறித்த முற்போக்கான உருவகங்கள் எல்லாமே அங்கிருந்த அரசின்மையாளர்களிடம் விவாதித்து உருவாக்கபப்ட்டவையே .இன்று ஐரோப்பிய அரசு மறுப்புப் போராட்டங்கள் அனைத்திலும் ஆழத்தில் அரசின்மைக் கோட்பாடு உள்ளது என்பதைக் காணலாம்.

அரசு என்ற கருத்து எப்போது உருவானதோ அப்போதே அரசின்மை கோட்பாடுகளும் உருவாகிவிட்டன. இந்தியா அரசின்மைக்கோட்பாடுகளை அரசுக்கோட்பாடுகளை விட அதிகமாக வளர்த்த தேசம். பண்டைய கிரேக்க சிந்தனைகளில் அரசின்மை என்பது ஒரு முக்கியமான கருத்தாக வளர்ந்து வந்திருப்பதைக் காணலாம். ஒறுப்புவாதிகள் [Cynics ] கிரேக்க மரபின் அரசின்மை நோக்கை முன்னெடுத்தவர்கள். இயற்கையுடன் ஒன்றி வாழும்

எளிய வாழ்க்கையையே அவர்கள் மானுடத்துக்குரியதாக சொன்னார்கள். பணம் அதிகாரம் புகழ் ஆகிய மூன்றையும் முற்றிலுமாகத்துறப்பதே அதற்கான வழி என்றார்கள்.

மெய்யறிவுவாதம் [Gnosticism] என்று சொல்லப்பட்ட கிரேக்க சிந்தனை மரபு மனிதர்கள் தன்னளவில் அதிதூய ஆத்மாக்கள் என்றும், லௌகீக உலகின் இழிவுகளிலும் கீழ்மைகளிலும் அவர்கள் சிக்கிக்கொண்டிருக்கிறார்கள் என்றும், உலகியலில் இருந்து விடுவித்துக்கொண்டு தங்கள் ஆன்மாவை தூய்மைப்படுத்திக்கொள்வதே மீட்பு என்றும் வாதிட்டது.மெய்யறிவுவாத சிந்தனைகளில் ஏராளமான பிரிவுகள் உள்ளன. இவர்களும் சமூக அமைப்பையும் அரசையும் எதிர்த்த அரசின்மைவாதிகளே.

ஐரோப்பாவில் நவீன அரசுகளைப்பற்றிய விவாதங்கள் வலுவாக உருவான பதினேழு ,பதினெட்டாம் நூற்றாண்டுகளில் அரசின்மைக் கோட்பாடுகளும் பலவகையான விரிவாக்கங்களைப் பெற்று நவீன அரசியல்தரப்புகளாக உருவாகி வந்தன. அரசின்மையாளர்களில் இன்று பல்வேறுவகையான தத்துவநிலைபாடுகள் கொண்டவர்கள் இருக்கிறார்கள். முழுமுற்றான அரசின்மைக்காக வாதிடுபவர்கள், அறிவுலகம் அரசின்மையில் செயல்படவேண்டும் என வாதிடுபவர்கள், அரசுக்கு அப்பாற்பட்ட குழுக்களுக்காக வாதிடுபவர்கள், வரம்பில்லாத வாழ்க்கைக்காக வாதிடுபவர்கள் என அவர்கள் பல ரகம்.

பதினெட்டு பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் பொதுவாக அரசு இல்லாத அமைப்புகளைப் பற்றிய ஆர்வம் ஐரோப்பாவில் தீவிரமாக இருந்திருக்கிறது. முற்றதிகாரம் கொண்ட மன்னர்களின் ஆட்சி மற்றும் கிறித்தவசபைகளின் ஆட்சி ஆகியவற்றுக்கு மாற்றாக இதைப்பற்றி சிந்தனைசெய்திருக்கிறார்கள். அரசு இல்லாமல் தங்களைத் தாங்களே ஆட்சி செய்துகொள்ளும் பல வகையான கிறித்தவ குழுக்கள் இக்காலகட்டத்தில் ஐரோப்பாவில் உதயமாயின. இவற்றை பொதுவாக மெய்யறிவுவாத கிறித்தவர்கள் என்கிறார்கள். தூய்மைவாதக் கிறித்தவர்கள் என்பதும் உண்டு.

அவர்கள் அரசதிகாரத்தை எதிர்த்தமையால் அரசாலும் கிறித்தவ பெரும்சபைகளாலும் வேட்டையாடப்பட்டார்கள். அவர்களில் கணிசமானவர்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் அமெரிக்கா ஆஸ்திரேலியா கனடா போன்ற புத்துலகங்களில் குடியேறினார்கள். அமெரிக்காவில் பாஸ்டன் அவ்வாறு தூய்மைவாத கிறித்தவர்கள் குடியேறிய முக்கியமான ஊர். பின்னாளில் தோரோ, எமர்சன் போன்ற அரசின்மையாளர்கள் அந்த மரப்ல் இருந்தே உருவானார்கள். நவீன அரசின்மைக் கோட்பாடுகளின் விளைநிலமாக பாஸ்டன் மாறியது. இன்றும் அமெரிக்காவின் அரசின்மைசிந்தனைகளின் மையமாக பாஸ்டன் இருக்கிறது.

அரசாங்கம் ஏதோ ஒருவகையில் பொருளிழந்து உதிர்ந்துவிடும் என்ற எண்ணம் பத்தொன்பதாம் நூற்றாண்டில் சிந்தனையாளர்கள் நடுவே பிரபலமாக
இருந்தது. கதே, லோக், ஹோப்ஸ், லோக், வால்டேர், ரூஸோ, ஹெகல், நீட்சே, ர ஸ்கின், ஜெ.எஸ்.மில் போன்ற சிந்தனையாளர்கள் அனைவருமே எப்படி அரசின்மை சாத்தியமாக்கூடும் என்று தங்கள் நோக்கில் சிந்தனை செய்திருக்கிறார்கள். அந்த சிந்தனைப்போக்கை ஒட்டித்தான் கார்ல் மார்க்ஸ் கம்யூனிச சமூக அமைப்பின் உச்சத்தில் அரசு உதிர்ந்து போகும் என்று சொன்னார். நவீனத்தொழில்நுட்பம் உலகை ஒருங்கிணைத்து ஒரே சமூகமாக ஆக்கிவிடும் என்றும் அதன் விளைவாக அரசில்லாத புவிச்சமூகம் உருவாகும் என்றும் எண்ணினார்கள். தொழில்நுட்பத்தை நம்பிய அனைவரிடமும் அந்த நம்பிக்கை ஒருவகையில் இருந்தது.

உலகப்போர்கள் நடந்து அரசுகள் நவீன தொழில்நுட்பங்கள் மூலம் மேலும் வலுவான ராணுவக்கட்டுமானங்களாக ஆவதைக் கண்டபின்னர் இந்த எண்ணப்போக்கு நேர் தலைகீழாகத் திரும்பியது. அசாதாரணமான வல்லமை கொண்ட எதிர்கால அரசுகளைப் பற்றிய அச்சங்கள் உருவாயின. ஜார்ஜ் ஆர்வலின் '1984' இந்த எண்ணப்போக்கை மிகச்சிறப்பாக முன்வைத்த நாவல். ஆல்டஸ் ஹக்ஸ்லியின் 'துணிச்சலான புத்துலகம்' [Brave New world] இன்னொரு குறிப்பிடத்தக்க நாவல். இன்றுவரை அறிவியல் புனைகதைகளின் பிரபலமான கருவாக இருப்பது அதிநவீன தொழில்நுட்பம்

மூலம் உருவாகச்சாத்தியமான முழுமுற்றதிகாரம் கொண்ட எதிர்கால அரசுகளைப்பற்றிய ஊகங்களே.

இந்த ஐயங்கள் அரசு மேல் உள்ள அவநம்பிக்கையை மேலும் பெருக்கின. முதல் உலகப்போருக்குப்பின்னர்தான் ஐரோப்பாவில் அரசின்மைவாதம் மேலும் வீச்சை பெற்றது. இன்று உலகமெங்கும் பலவகையான அரசின்மைவாதக்குழுக்கள் செயல்பட்டுவருகின்றன

### இரண்டுவகை அரசின்மைகள்

பொதுவாக ஐரோப்பிய அரசின்மைவாதிகள் அனைவரையும் பொதுவாக இரு பெரும் பிரிவுகளுக்குள் அடக்கலாம். ஒன்று **புரட்சிகர அரசின்மையாளர்கள்**. இரண்டு, **தன்நெறி அரசின்மையாளர்கள்**. புரட்சிகரமான அரசின்மைவாதிகள் பொதுவாக தகர்ப்பாளர்கள். இருந்துகொண்டிருக்கும் அரசாங்க அமைப்பையும் அதற்கு அடித்தளமாக இருக்கும் மனநிலைகளையும் ஆசாரங்களையும் தகர்ப்பதே அவர்களின் இயல்பாக இருக்கிறது.

இத்தகைய சிந்தனைகளுக்கு மிகச்சிறந்த உதாரணமாக அமைபவர் இவான் துர்கனேவ் எழுதிய ‘தந்தையும் தனயர்களும்’ என்ற நாவலின் மையக்கதாபாத்திரமான பஸரோவ். ‘நீங்கள் அனைத்தையும் தகர்ப்பது பற்றி பேசுகிறீர்கள். நீங்கள் தகர்த்தால் என்ன மிஞ்சும்? வேறெந்த அமைப்பை நீங்கள் பதிலுக்கு முன்வைக்கிறீர்கள்?’ என்று பசரோவின் நண்பன் அர்க்காதியின் அப்பா கேட்கையில் பஸரோவ் மூச்சுத்திணறி ஆவேசத்துடன் சொல்கிறார். ”நாங்கள் அதைப்பற்றி யோசிக்கவில்லை. இப்போது இதை தகர்த்து எறிவோம். இது பயனற்ற வெற்றுக்குப்பை. இது அழியட்டும். இடிபாடுகளில் இருந்து மானுடம் புதிதாக எதையேனும் கட்டிக்கொள்ளட்டும். அது தேவைக்குரிய உருவாக்கப்பட்டதாகவே இருக்கும்”

தன் கொள்கையைப்பற்றி பஸரோவ் சொல்கிறான், "நான் எதிர்க்கிறேன். அனைத்தையும். அதற்கு காரணம் வேண்டுமென்பதில்லை. அவை இருக்கின்றன என்பதற்காகவே எதிர்க்கிறேன்" இந்த நிலைபாடு மறுப்புவாதம் [Nihilism] என்று துர்கனேவால் சொல்லப்பட்டது. பின்னர் ஒரு தத்துவக்கலைச்சொல்லாகவே ஆகிவிட்டது. மறுப்புவாதிகள்தான் ஐரோப்பாவின் ஆரம்பகட்டப் புரட்சியாளர்கள்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் மதம்,அரசியல்,தத்துவம் மூன்று துறைகளிலும் புரட்சியாளர்கள் ஊடுருவினர். ஏற்கப்பட்ட அனைத்தையும் தகர்க்க முற்பட்டனர். ஒவ்வொன்றையும் தங்கள் பிடிக்குள் கொண்டுவந்துவிடலாம் என்றும் ஒவ்வொன்றையும் புதிதாக உருவாக்கிவிடலாம் என்றும் அவர்கள் கனவு கண்டார்கள். இவர்களை அன்றைய அமைப்பு மிகக்கொடுமையான அடக்குமுறைகள் மூலம் எதிர்கொண்டது. ஆனால் அவற்றையும் மீறி பல தேசங்களில் இவர்கள் அரசையும் அமைப்பையும் கைப்பற்றினார்கள்.

புரட்சிகரமான அரசின்மைவாதிகளுக்கும் தாராளஅரசுவாதிகளுக்கும் இடையே பெரும்பாலும் நல்ல புரிதல் இருந்தது. இந்த புரிதலை நாம் உலகம் முழுக்க காணலாம். தாராள அரசு வாதிகள் புரட்சிகர அரசின்மைவாதிகளை தங்களைப்போலவே மாற்றத்தை விரும்புகிறவர்களாகக் கருதினார்கள். மிகச்சிறந்த உதாரணம் என்றால் பிரெஞ்சுப்புரட்சிதான். அது தாராளவாதிகளும் புரட்சியாளர்களும் இணைந்து நடத்திய ஒன்று. தாராளவாதிகள் கையில் இருந்து புரட்சிகர அரசின்மைவாதிகள் கைக்கு அது சென்று சேர்ந்தது.

மார்க்சியம் புரட்சிகர அரசின்மைவாதத்தின் இருபதாம் நூற்றாண்டின் ஆகச்சிறந்த உதாரணம். செவ்வியல் மார்க்ஸியம் அரசின்மைக் கோட்பாட்டில் அழுத்தமாக ஊன்றிய ஒன்று. அதுவே ருஷ்யாவிலும் சீனாவிலும் உலகத்தின் மிகவும் பலம் பொருந்திய அரசுகளை அமைத்தது என்பது ஆச்சரியமானதே. மார்க்ஸின் கொள்கையின்படி தொழிலாளர்களின் முற்றதிகாரம் உருவாகும். அது ஏற்கனவே இருக்கும்

அரசு மற்றும் அரசு சார்பான அமைப்புகளை தகர்த்து எறியும். அந்த வெற்றிடத்தில் மக்கள் உழைப்பாளர் குழுமங்களாக [ commune] அமைந்து தங்களைத் தாங்களே ஆண்டுகொண்டு வாழ்வார்கள். அரசு உதிர்ந்து மறையும்.

இரண்டாவது வகை அரசின்மைவாதம் தன்விலக்கம் சார்ந்தது..மைய ஓட்டமாக உள்ள பண்பாட்டையும் அதன் அரசு அமைப்பையும் நிராகரித்து விலகி தங்களுக்கு உகந்த மாற்றுச் சமூக அமைப்புகளை அமைத்துக்கொள்பவர்களை தன்விலக்க அரசின்மையாளர்கள் என்று சொல்லலாம். இந்த வகையான அரசின்மையாளர்களின் மரபுத்தொடர்ச்சி கிரேக்க ஒறுப்பியலில் உள்ளது.

மிகச்சிறந்த உதாரணம் கிரேக்க தத்துவ ஞானியான டயோனிசியஸின் கதை.[ **Dionysius** ] ஒரு மாட்டுவண்டி அருகே வெறுந்தெருவில் படுத்திருந்த அவரிடம் கிரேக்க மாமன்னன் அலக்ஸாண்டர் நீங்கள் ஏன் வேலைசெய்யக்கூடாது என்று கேட்டதாகவும் அவர் ஏன் வேலை செய்யவேண்டும் என்று கேட்டபோது பணம், அதிகாரம், புகழ் ஆகியவற்றுக்காக என்றான் அவன். அவை எதற்காக என்ற கேள்விக்கு மனமகிழ்ச்சிக்காக என்றான். இப்போதே எனக்கு பூரணமான மனமகிழ்ச்சி உள்ளதே என்றார் அவர். உங்களுக்கு நான் என்ன செய்யவேண்டும் என மாமன்னன் கேட்டபோது அந்த வண்டி இளவெயிலை மறைக்கிறது, சற்றே விலக்கி வைத்துவிட்டுப்போ என்றாராம் டயோனியஸ்.

கிறித்தவ மரபுக்குள் மெய்யறிவுவாத கிறித்தவம் ஒரு தனி போக்காக நெடுங்காலம் நீடித்தது . இவர்களும் தன்விலக்க அரசின்மைவாதிகளே .இக்குழுக்கள் மைய கிறித்தவ ஓட்டத்திற்கு எதிராக தங்கள் கிறித்தவ சிற்றமைப்புகளை உருவாக்கிக் கொண்டார்கள். இவர்கள் பெரிய தேவாலயங்கள், கூட்டுவழிபாடுகள் முதலியவற்றை ஏற்றுக்கொள்ளவில்லை. சிறிய முழுக்களாக தனிச் சமூகங்களாக வாழ்ந்தனர். கடுமையான நெறிகளை கடைப்பிடித்தனர். உபவாசம், தூக்கம் தவிர்த்தல் , தவம் போன்றவற்றை தங்கள் வழியாக முன்வைத்தார்கள்.அவர்களுக்கு எதிராக கத்தோலிக்க திருச்சபை கடுமையான ஒடுக்குமுறைகளை பயன்படுத்தியது.ஆனால் பின்னர் அம்மரபுகள் கத்தோலிக்க பெருமரபுக்குள் இழுக்கப்பட்டன. ஹெர்மிட்டேஜ்,

அபே என்றெல்லாம் சொல்லப்பட்ட தவமடங்கள் இந்த மரபுகளின் உருவாக்கமே. புலன் ஒடுக்கம் என்பது கத்தோலிக்க மதத்திலும் ஒரு பெரும் ஆசாரமாக ஆகியது. புனித ·ப்ரான்ஸிஸ் அதற்கு வழியமைத்தார்

.நவீன ஐரோப்பா உருவாகி வந்தபோது இவ்விரு அரசின்மைகளும் இருவகையில் வளர்ந்து பல்வேறு சாத்தியக்கூறுகளை கண்டடைந்தன. ஜனநாயக சிந்தனையின் விதைகளை பரப்பியவர்கள் என்று சொல்லபப்டுகிற லோக் போன்றவர்களே பொருள்முதல்வாதத்தின் முன்னோடிகளாகவும் இருந்தார்கள். மறுப்புவாதமும் பொருள்முதல் வாதமும் கைகோர்த்துக்கொண்டன. ஏனென்றால் அக்காலகட்டத்தில் எல்லாவகையான அமைப்புகளும் கருத்துமுதல்வாதம் சார்ந்தவையாக இருந்தன. ஒரு மையக்கருத்தின் வெளிவிளக்கமாகவே அமைப்புகள் கருதப்பட்டன. அந்த மையக்கருத்து இன்றியமையாததாகவும் புனிதமானதாகவும் கருதப்பட்டது. ஆகவே பொருள்முதல்வாதம், நிரூபண வாதம் பேசியவர்களில் ஒருசாரார் கடுமையான மறுப்புவாதிகளாக ஆனார்கள். அவர்களை பத்தொன்பதாம் நூற்றாண்டின் தத்துவக் கலகக் காரர்கள் எனலாம். ·பாயர்பாக் அவர்களில் ஒருவர்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் நடந்த தத்துவ மோதல்களை இந்த எளிமையான வகைப்பாட்டில் இருந்து மேலும் மேலும் சிக்கலாக ஆக்கியபடியே செல்லலாம்.. உதாரணமாக மார்க்ஸியத்தின் தத்துவப் பரிணாமத்தை இப்படிச் சொல்லலாம். ·பாயர்பாக் முன்வைத்த தூய பொருள்முதல்வாத அரசின்மைக் கோட்பாட்டில் இருந்து மார்க்ஸ் ஆரம்பிக்கிறார். ஹெகெல் வரலாற்றின் இயக்கத்திற்கு ஒரு நோக்கமும் திசைவேகமும் உண்டு என்ற கருத்துமுதல்வாத தரப்பை முன்வைத்தார். வரலாற்று பொருள்முதல்வாதம் என்ற ஹெகலின் கோட்பாட்டின் வளார்ச்சிநிலையாகவே மார்க்ஸ் முரணியக்க வரலாற்றுப் பொருள்முதல்வாதம் என் தத்துவத்தை உருவாக்கினார். பொருளியல் ஆற்றல்களின் முரணியக்கத்தாலேயே வரலாற்றின் முன்னகர்வு சாத்தியமாகிறது என விளக்கினார். அதாவது பொருள்முதல்வாதச் சிந்தனைகளும் கருத்துமுதல்வாதச் சிந்தனைகளும் ஒன்றை ஒன்று உள்வாங்கி வளார்வதை நாம் இக்காலகட்டத்தில் காண்கிறோம்.

இவ்வாறு மறுப்புவாதமாக ஆரம்பித்த மார்க்ஸின் கோட்பாடு புரட்சிகர அரசின்மைவாதமாக விரிவு பெற்று தாராளவாதிகளுடன் கைகோர்த்துக்கொண்டு பல இடங்களில் ஜனநாயகக் கோரிக்கையாக செயல்பட்டது. பல இடங்களில் மையத்தேசியத்துக்கான கோரிக்கையாக விளக்கவும்பட்டது. ஆனால் லெனின் மூலம் அது மையஅதிகார அரசாங்கமாக ஆகியது.

இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஐரோப்பாவில் இருவகை அரசின்மை உருவகங்களும் ஒன்றுடன் ஒன்றுபலவகையிலும் கலந்து ஏராளமான கருத்துநிலைகளை உருவாக்கியிருந்தன. பலவகையான புரட்சிகர அரசின்மைக் குழுக்கள் செயல்பட்டுக்கொண்டிருந்தன. அவற்றில் தொழிலாளர்களின் குழுமியங்களும் [communes] அடக்கம். அத்தகைய குழுமியங்கள் எதிர்கால அரசில்லாத சமூகத்தின் மாதிரிகளாக எண்ணப்பட்டன. புருதோன்வாதிகள், ஃபேபியன் குமுகத்தினர் போன்றவர்கள் அத்தகைய சில சமூகக்குழுக்களை விரிவாக உருவாக்குவதைப் பற்றிய கனவுகளை முன்வைத்தார்கள். அவர்களுடன் விவாதித்த மார்க்ஸ் ‘குழுமியவாதம்’ என்று பெயர் சூட்டப் பெற்ற கம்யூனிச கோட்பாடுகளை அவற்றைச் சார்ந்தே உருவாக்கினார்.

ப்ரெஞ்சு தத்துவ சிந்தனையாளரான புருதோன் [**Pierre-Joseph Proudhon]**தன்னை ஒரு அரசின்மைவாதியாக அறிவித்துக்கொண்டவர். மார்க்ஸியக் கோட்பாடுகள் மேல் ஆரம்பத்தில் ஆழமான செல்வாக்கைச் செலுத்தியவர்’உடைமை என்பது திருட்டே’ என்ற அவரது வரி பிரபலமானது. ‘புரூதோனுக்கு மறுப்பு’ என்றபேரில் சோவியத் வெளியீடாக வந்துள்ல நூலில் கார்ல் மார்க்ஸ் உடைமையில்லாத சமூக குழுக்களை அமைக்கும் புருதோனின் சிந்தனைகளை மறுத்து, மேலும் விரிவான வரலாற்றுப் பார்வையில், தனியுடைமைகளே இல்லா ஒட்டுமொத்தச் சமூக அமைப்பை முன்வைக்கிறார்.

இந்தக்காலகட்டத்தின் கலைஞர்கள் சிந்தனையாளர்களில் பெரும்பாலானவர்களை அரசின்மைவாதம் கவர்ந்திருக்கிறது. அரசின்மையும்,. சுதந்திரமும், படைப்பூக்கமும் பிரிக்க

முடியாதவையாகவே கருதபப்ட்டன. ஃபேபியன் குழுகம் ஒரு முக்கியமான கருத்தாக பேசபப்ட்ட நாட்களில் ஜார்ஜ் பெர்னாட் ஷா, வெர்ஜீனியா வுல்ஃப், போன்ற பல பிரிட்டிஷ் எழுத்தாளர்கள் அந்தக்கருத்தால் ஈர்க்கப்பட்டிருக்கிறார்கள். நெடுங்காலம் அரசின்மைக்குழுமங்களை கற்பனைசெய்த எழுத்துக்கள் அமெரிக்காவிலும் வந்துகொன்டிருந்தன.

உதாரணமாக ஜான் ஸ்டீன்பெர்க்கின் கோபத்திராட்சைகள் [The Grapes of Wrath, John Steinbeck] என்ற புகழ்பெற்ற அமெரிக்க நாவல். இது காலத்தால் பிந்தியது. என்றாலும் அது ஐரோப்பியக் கனவுகளை பின்பற்றுகிறது. இதில் கேசி [**Jim Casy]** என்ற ஒரு முன்னாள் பாதிரியாரின் தலைமையில் தொழிலாளர்கள் ஒரு குழுமியத்தை உருவாக்கி ஒரு 'இலட்சிய அரசின்மைச் சமூகத்தை' உருவாக்குவதன் சித்திரம் உள்ளது. கேஸிக்கு ஸ்டீன்பர்க் ஏசுகிறிஸ்துவின் சாயலை அளித்துள்ளமையும் கவனத்திற்குரியது.

அரசு இல்லாத சமூகங்களை அமைக்கும் முயற்சியின் விளைவாகவே பழங்குடிச்சமூகங்கள் மேல் தனியான கவனம் விழுந்தது. அவற்றில் எப்படி அரசு என்ற உருவத்தின் வேர்கள் உள்ளன, உருக்கொள்கின்றன என்ற ஆய்வுகள் உருவாயின.இந்தக்காலகட்டத்தை நவீன அரசதிகாரம் குறித்த மையக்கருத்துக்கள் அனைத்துமே உருவான ஒரு காலம் என்று சொல்லமுடியும் . இன்றும்கூட நவீன அரசியல் கருத்துக்களை வடிவமைத்த, அரசதிகாரம் மற்றும் குடிமையதிகாரம் குறித்த கோட்பாடுகளை உருவாக்கிய, பெரும்பாலான சிந்தனையாளர்களில் அரசின்மை கொள்கை ஆழமான செல்வாக்கைச் செலுத்திருப்பதைக் காணலாம். உதாரணம், மிஷேல் ஃபூக்கோ, நோம் சாம்ஸ்கி.

புரட்சிகர அரசின்மைவாதிகள் பெரும்பாலான இடங்களில் தாராள அரசுக்காக போராடியவர்களுடன் இணைந்து செயல்பட்டார்கள். ஆனால் ஜெர்மனியின் நாஜிக்களும் புரட்சிகர அரசின்மைவாதிகளின் பெரும்பாலான கோஷங்களை தாங்களும் எழுப்பியே முற்றதிகாரத்தைப் பிடித்தார்கள். இந்தக்கலவை ஒவ்வொரு குழுவிலும் ஒவ்வொரு வகையில் செயல்பட்டதைக் காணலாம்.

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த ‘நடையர்’ ஜான் ஸ்டுவர்ட் [John “Walking” Stewart] நவீன இயற்கைவாத அரசின்மையாளார்களுக்கு முன்னுதாரணமாக அமைந்தவர். மிகசுவாரசியமான வாழ்க்கை கொண்டவர் ஜான் ஸ்டுவர்ட். இந்தியாவில் சென்னையில் பிரிட்டிஷ் அரசில் ஒரு குமாஸ்தாவாகப் பணியாற்றியவர் இந்தியாவில் சில யோகிகளால் கவரப்பட்டார். அதன் பின்னர் சென்னையிலிருந்து கிளம்பி கால்நடையாகவே பாகிஸ்தான் வழியாக ஆப்கானிஸ்தான் சென்று அரேபியாவில் நுழைந்து ஐரோப்பாவுக்குச் சென்றார். இதன் வழியாக மனிதனின் இயற்கைவாழ்க்கையைப்பற்றிய அரசினமைக் கோட்பாடு ஒன்றை உருவாக்கிக் கொண்டார். அது அக்கால பிரிட்டனில் உள்ள அரசின்மைவாதிகளை பெரிதும் கவர்ந்திருக்கிறது

ஜான் ஸ்டுவர்ட் இயற்கையில் உள்ள ஒவ்வொன்றிலும் ஒரு உட்கருத்து அவற்றின் அமைப்பிலேயெ உள்ளது என வாதிட்டார். அதைப்புரிந்துகொண்டு அதற்கேற்ப மனிதன் வாழ்க்கையை அமைத்துக்கொண்டால் மட்டுமே சிக்கல் இல்லாத சீரான வாழ்க்கை அவனுக்கு அமையும். அவரது சிந்தனைகளின் பாதிப்பு ஐரோப்பிய இயற்கை வாதிகள் அனைவரிடமும் உண்டு. காந்தி கூட அவரது ‘நடைப்பித்தை’ ஸ்டுவர்ட்டிடம் இருந்து பெற்றுக்கொன்டிருக்கலாம் . தோரோ அவரது முன்மாதிரிடாகக் கொண்டது மில் அவர்களையே. இன்றுவரை உலகம் எங்கும் உள்ள இயற்கைவாதிகளுக்கு தோரோ முக்கியமான முன்னுதாரணம். உலக அளவில் இன்று தன்விலக்க அரசின்மைவாதம் பேசுபவர்களில் பெரும்பாலானவர்கள் இயற்கைவாதிகளே

**தேசியத்தலைவர்களும் தேசிய உருவகங்களும்**

இந்திய சுதந்திர்ப்போராட்டத்தின் பின்புலத்தில் ஒவ்வொரு தலைவரையும் அவர் மனதில் இருந்த தேசிய உருவகம் என்ன என்பதை வைத்தே நம் புரிந்துகொள்ள வேண்டும். இப்பிரிவினை முழுமுற்றானதாக இருக்காது என்பதையும் கணக்கில் கொள்ளவேண்டும். அவர்களின் பேச்சு

செயல்பாடுகள் ஆகியவற்றைக் கொண்டு அவர்களின் அரசு உருவகம் பெரும்பாலும் இந்தத் தரப்பைச் சார்ந்தது என்று ஊகித்து வரையறைசெய்துகொள்வது அன்றைய விவாதச்சூழலைப் புரிந்துகொள்ள உதவிகரமானது என்று மட்டுமே கொள்ள வேண்டும்.

மையத்தேசியவாதத்தின் மிகச்சிறந்த உதாரணமாக அமைபவர் சாவார்க்கர். 1905-1909 வாக்கில் லண்டனில் இருந்த சாவார்க்கர் ஐரோப்பாவில் அன்று உருவாகி வந்த மையத்தேசியவாதத்தை மிகவும் கூர்ந்து கவனித்து அத்தகைய ஒன்றை இந்தியாவிலும் உருவாக்கும் கனவை வளர்த்துக்கொண்டார். இதில் ஆர்வமூட்டும் கூறு என்னவென்றால் சாவார்க்கருக்கு முன்னுதாரணமாக அமைந்தது பிரிட்டிஷ் மையத்தேசியம் உருவாக்கிய சாம்ராஜ்யமே. அதைத்தான் அவர் எதிர்த்துப் போராடினார், ஆனால் அதைத்தான் அவர் தன் தரப்பாக உருவாக்கவும் எண்ணினார் — ஓர் இந்து சாம்ராஜ்யம் ! அந்தக்கனவு சாவார்க்கரில் இருந்து வளர்ந்து ராஷ்டிரிய சுயம் சேவக் சங்கமாக ஆகி இன்று வரை இந்திய அரசியலில் ஒரு மைய விசையாக நீடிக்கிறது.

இரண்டாவது தாராள தேசியவாதத்தின் மிகச்சிறந்த உதாரணமாக அமைபவர் நேருதான். நேரு தன் வாழ்நாளெல்லாம் கனவுகண்டது முழுமையான ஒரு தாராளவாத-நலம்நாடி அரசையே எனலாம். இந்திய சுதந்திரத்தின் ஆரம்ப காலங்களில் அவருக்கு இந்திய சமூகத்தின் முழுமையான ஆதரவு இருந்தது. அந்நிலையில் அவர் முற்றதிகாரம் நோக்கிச் செல்லும் உணர்வை அடைவதற்குப் பதிலாக அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு இந்தியாவின் குடியாட்சி அமைப்புகளை வலுவாக நிறுவத்தான் முயற்சி செய்தார். இந்தியக் குடியாட்சியின் மையத்தூண்களாக இன்றும் இருக்கும் தேர்தல் ஆணையம், தணிக்கைத்துறை, நீதிமன்றம், இதழியல் போன்ற பல அமைப்புகள் இன்றும் அரசியல்சட்ட பாதுகாப்புடன் சுதந்திரமாகச் செயல்படும் தளத்தை அமைத்தவர் அவரே. ஆகவே இந்தியக் குடியாட்சியின் சிற்பியும் அவரே

இந்திய அரசின்மைவாதிகளில் மறுப்புவாதம் சார்ந்த அணுகுமுறைக்கு மிகச்சிறந்த உதாரணம் என்று ஈ.வே.ராமசாமி நாயக்கர் அவர்களையே சொல்லவேண்டும். முழுமையான மறுப்பாளராகவும் கலகக்காரராகவுமே அவர் இருந்தார். எதையும் கட்டி எழுப்ப அவர் முயன்றதில்லை. பின்னர் அவர் பெயரால் கட்டி எழுப்பப்பட்ட அனைத்துக்குமே அவர் எதிரானவர் என அவரது எழுத்துக்கள் காட்டுகின்றன. ஈ.வே.ரா எல்லாவகையிலும் ஓர் அரசின்மைவாதியாகவே இருந்தார். எந்த ஒரு அரசு உருவகமும் அவரை உள்ளடக்கியதாக அமைய முடியாது. அவர் பெயரால் உருவான அரசுக்குக்கூட அவர் வெளியேதான் இருந்தார்.

ஒருங்கிணைக்கபப்ட்ட எச்சிந்தனை மேலும் அவர் ஐயப்பட்டார். மரபான எதையும் அவர் ஏற்க மறுத்தார். வலியுறுத்தப்பட்ட எதையுமே முன்விளைவு பின்விளைவுகளைப் பார்க்காமல் எதிர்த்தார். அவரது முன்னுதாரணங்கள் ஐரோப்பாவில்தான் இருந்தன என்றாலும் அவரது மன அமைப்பு இந்திய சார்வாக மரபைச் சேர்ந்தது. மறுப்பே அவரது தத்துவம் என்று சொல்லலாம். ஐரோப்பிய சிந்தனையாளர்களைப்போல அவ்ரும் மறுப்புவாதத்தை பொருள்முதல்வாதச் சிந்தனைகளின் அடிப்படையில் அமைத்துக்கொண்டார். ஈ.வே.ரா அவர்கள் பகுத்தரிவுவாதம் என்று சொன்னது மறுப்பு நோக்கம் கொண்ட பொருள்முதல்வாத அமைப்பையே. அவருக்கும் அவர்காலகட்ட மார்க்ஸியர்களுக்கும் இடையே இருந்த முரண்பாடு என்பது இதுதான். அவர் மார்க்ஸியர்கள் ஐரோப்பாவில் நிராகரித்து முன்னே சென்றுவிட்டிருந்த பொருள்முதல்வாத மறுப்புவாதத்தைச் சேர்ந்தவர்.

இந்தியாவின் புரட்சிகர அரசின்மைவாதிகளில் முக்கியமான ஒரு முன்னுதாரணம் ஜெயப்பிரகாஷ் நாராயணன். கடைசிவரை அமைப்புமனிதராக மாற மறுத்து தன்னை ஒரு நிரந்தர எதிர்ப்பாளராகவே நிறுத்திக்கொண்டவர் அவர். அவரே உருவாக்கிய ஜனதா அரசுகூட அவருக்கு உவப்பானதாக அமையவில்லை. தெளிவாக விளக்கவில்லை என்றாலும் எப்போதும் ஜெயப்பிரகாஷ் நாராயணன் தீராத புரட்சிகரம் ஒன்றையே தன் அரசியலாக கொண்டிருந்தார். அதைத்தான் அவர் 'முழுப்புரட்சி' என்று எப்போதும் சொல்லிவந்தார். எல்லா தளங்களிலும் தலைகீழ் மாற்றம் என்பதே அவர் உத்தேசித்தது. அவரில் இருந்த

அரசின்மையும் அதன் விளைவான கட்டுப்பாடின்மையும் அவரை எந்த அமைப்புக்குள்ளும் அடங்க மறுத்து தனிமனிதராகவே கடைசிவரை நீடிக்கச்செய்தன.

இந்திய இடதுசாரி இயக்கங்கலுக்குள் பல வகையான அரசின்மைவாதிகளை நாம் காணமுடியும். உதாரணமாக கேரள கம்யூனிஸ்டுக் கட்சியின் ஆரம்ப காலத்து தலைவரான கெ.பி.ஆர் கோபாலனைச் சொல்லலாம். அவர் நிரந்தரமான புரட்சிவாதி. அவரால் ஏற்க முடிந்த ஒர் அரசுருவகமே கிடையாது எனலாம். சோஷலிஸ்டுகளில் அபப்டி பலர் இருந்தார்கள். யு.ஆர்.அனந்தமூர்த்தியின் நாவலான ‘அவஸ்தே’ அத்தகைய ஓர் அரசின்மைவாதியின் வாழ்க்கையைப் பற்றிய வலுவான சித்தரிப்பு. ஆனால் இந்திய இடதுசாரிகளைப் பொறுத்தவரை அவர்கள் எப்போதுமே அரசின்மைக்காக போராடவில்லை. ருஷ்யாவில் வலுவான மையத்தேசியம் உருவான பிறகே இந்தியாவில் பொதுவுடைமை சிந்தனை ஆரம்பிக்கிறது. ஆகவே இங்கே அது புரட்சிகர மையத்தேசியமாகவே முன்வைக்கப்பட்டது.

இந்த நான்கு அரசுக் கருத்தியல்களில் பலவகையான கலவைகளை நாம் நம்முடைய அரசியல் முன்னோடிகளில் காணலாம். இவர்களை இவ்வாறு அவர்கள் முன்வைக்கும் அரசு மாதிரி என்ன என்று பிரித்துக்கொண்டோமென்றால் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அவர்களுக்கு இடையேயான உறவுகளையும் ஒவ்வொருவரும் எடுத்த நிலைபாடுகளையும் இன்னமும் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியும். சாவார்க்கரின் மையத்தேசிய உருவகமே இன்று வரை இந்துதேசியவாதத்தின் அடிப்படை. சியாமபிரசாத் முகர்ஜி, தீ ன்தயாள் உபாத்யாயா முதல் அத்வானி வரை அதுவே தொடர்கிறது. ஆனால் நாம் வாஜ்பாய் அவர்களின் அரசியலுரைகளை வாசிக்கையில் அவரது மனம் தாராளவாத அரசு ஒன்றையே முன்மாதிரியாகக் கொண்டிருக்கிறது என்பதைக் காணலாம்.

முன்னோடிகளில் சுபாஷ் சந்திரபோஸ் ஒரு மையத்தேசிய உருவகத்தையே மனதில் கொண்டிருந்தார். இந்தியாவின் பண்பாட்டு மேன்மை மற்றும் உலகத்தலைமை வகிக்க அதற்கிருக்கும் வரலாற்றுத்தகுதி ஆகியவற்றைப் பற்றி அவர் ஆவேசமாகப் பேசிவந்தது அதையே காட்டுகிறது.சாராம்சத்தில் சுபாஷ் காந்தியைவிட சாவார்க்கருக்கே நெருக்கமானவர்.

அதேபோல ஒடுக்கப்பட்ட மக்களின் தலைவராக வந்த அம்பேத்கார் இந்தியாவின் ஜனநாயக அமைப்புகளை உருவாக்குவதில் நேருவுக்கு உதவியவர். ஜனநாயகத்தில் ஆழமான நம்பிக்கை கொண்டவர். ஆனால் மையத்தேசிய அரசே அவரது மனதில் இருந்தது. அரசியல் நிர்ணயசபை விவாதங்களில் அதிகாரப்பரவலாக்கம் சார்ந்த எந்த ஒரு கருத்தையும் அவர் மறுத்து நிராகரிப்பதைக் காணலாம். மகாவீர் தியாகி போன்றவர்கள் அம்பேத்கார் இந்திய அரசியல் சட்டத்தில் காந்தியத்தை முற்றாகவே கழுவி விட்டுவிட்டார் என்று குற்றம் சாட்டினார்கள். அம்பேத்காரைப் பொறுத்தவரை முற்போக்கு எண்ணம் கொண்ட ஒரு மைய அரசு, தன் எல்லா உட்கூறுகளையும் வலுவான அதிகாரம் மூலம் வழிநடத்தும் அரசே சிறப்பானது. உட்கூறுகளுக்கு ஜனநாயக உரிமைகள் அளிக்கப்பட்டால் அது மையத்தை வலிமையிழக்கச் செய்து அதன் முன்னகர்வை தடைசெய்யும். இது சாராம்சத்தில் ‘தத்துவவாதியான ஆட்சியாளன்’ என்ற பிளேட்டோவின் குடியரசுக் கோட்பாட்டில் இருந்தே ஆரம்பிக்கிறது

இக்காரணத்தால் அம்பேத்காருக்கு எப்போதுமே ஹிந்துமகாசபையுடன் நல்லுறவு இருந்திருக்கிறது. ஹிந்து மகாசபையின் டாக்டர் மூஞ்சேயுடன் அவர் அரசியல் உடன்பாடுகளுக்கு வந்திருக்கிறார். இந்து மகாசபையினரின் மகாராஷ்டிரப்பற்று அவரையும் ஒரு மராட்டியப்புதல்வராக காண முற்பட்டிருக்கிறது. அம்பேத்காரின் வரலாற்றில் இந்த அம்சம் இன்று பேசப்படுவதில்லை. 1952ல் அம்பேத்கார் கடைசியாக தேர்தலில் நின்றபோது அவருக்கு பின்னர் பாரதீய மஸ்தூர் சங்கை நிறுவிய ஆர்.எஸ்.எஸ்காரரான தத்தோபந்த் டெங்கடி தேர்தல் ஒருங்கிணைப்பாளராகப் பணியாற்றியிருக்கிறார்.

அதேபோல பட்டேலையும் சொல்லலாம். காந்தியின் மாணவராக அரசியலில் விளங்கிய பட்டேல் ஜனநாயக நோக்கையே பிரதானமாகக் கொண்டிருந்தார். ஆனால் அவரது அகம் நாடிய அரசு என்பது மையத்தேசிய அரசே. இந்தியாவை இன்றைய உறுதியான மைய அரசாங்கமாக ஆக்கியவர் அவரே. இக்காரணத்தால் பட்டேலுக்கும் ஹிந்துமகாசபை மற்றும்

ஆர்.எஸ்.எஸ் இயக்கத்தின்பால் ஒரு மதிப்பு இருந்தது. அவர்களின் இந்துதேசியம் என்ற கருத்தை அவர் ஏற்கவில்லை என்றாலும் பண்பாடு சார்ந்த மையத்தேசிய உருவகத்தை ஏற்றுக்கொண்டிருந்தார்.

ஆனால் நேரு கடைசிவரை இந்துதேசியவாதிகளை சற்றும் ஏற்க முடியாதவராக இருந்தார். அவரது மனச்சாய்வு புரட்சிகர அரசின்மையையும் புரட்சிவாதிகளையும் ஏற்றுக்கொள்வதாக இருந்தது. அவரது கடுமையான விமரிசகர்களாக இருந்தாலும் அவருக்கு சோஷலிஸ்டுகளிடம் பெரிய மனவேறுபாடுகள் இருக்கவில்லை. இந்திய இடதுசாரிகளுக்கு நேரு அரசியல் எதிரியாக இருந்தாலும் அவர் அவர்களுக்குப் பிடித்தவராகவே இருந்தார். அவர்கள் படேலை காங்கிரஸின் வலதுசாரிமுகமாகவும் நேருவை இடதுசாரி முகமாகவும் பார்த்தார்கள்.

ஏ.கே.கோபாலன், இ.எம்.எஸ்.ஜோதிபாஸ¤ , சி.அச்சுதமேனன் போன்ற மார்க்ஸிய பெருந்தலைவர்களைப் பார்க்கையில் அவர்கள் மார்க்சியக் கருத்தியலின் உள்ளே இருந்தாலும் அவர்களின் அரசியல் கருத்துருவம் என்பது தாராளவாத அரசே என்பதைக் காணலாம். அவர்கள் ஜனநாயகவாதிகளாகவே கடைசிவரை இருந்திருக்கிறார்கள். ஆகவேதான் அவர்களின் ஆழத்தில் நேரு மீது ஒரு பிரியம் இருந்துகொண்டிருந்தது.

இந்தியாவின் தன்விலக்க அரசின்மைவாதிகளில் முதன்மையானவர் காந்தி. இன்றும் அரசின்மை சார்ந்த மாற்று அமைப்புகளை அல்லது குழுக்களை உருவாக்கும் அனைவரிலுமே ஏதேனும் ஒருவழியில் காந்தியின் வலுவான பாதிப்பு இருந்துகொண்டிருக்கும். காந்தி லண்டனில் இருந்தபோது அவரை மிகவும் ஆழமாகப் பாதித்தவர்கள் இயற்கைசார்ந்த தன்விலக்க அரசின்மைக் கருத்துக்களை முன்வைத்தவர்களான தல்ஸ்தோய், ரஸ்கின், தோரோ போன்றவர்கள். நடையர் ஜான் ஸ்டுவர்ட்டின் சிந்தனைகளின் நேரடிப்பாதிப்பையும் நாம் காந்தியில் காணாலாம். அதாவது காந்தி ஓர் அரசை உருவாக்க முயன்றவரல்ல. அவர் அரசுவாதியே அல்ல. அவர் அரசின்மைவாதி. ‘அடிப்படையில் காந்தியம் என்பது ஓர் அராஜகம். அதை

எந்த ஒரு அரசு அமைப்பும் எதிரியாகவே கருதும்' என்று அதை சரியாகவே அஷிஷ் நந்தி சுட்டிக்காட்டுகிறார்.

எதிர்கால இந்தியாவைப்பற்றிய காந்தியின் கனவு அங்கிருந்தே ஆரம்பிக்கிறது. அவரது 'ஹிந்துசுயராஜ்ய'த்தின் வேர் அந்த ஐரோப்பிய அரசின்மைவாத மரபிலேயே உள்ளது.

இந்திய சுதத்திரப்போராட்டத்தை முன்னின்று நடத்தியபோது காந்தி கொண்டிருந்த தேசிய உருவகம் என்பது அவர் தென்னாப்ரிக்காவில் இருந்தபோதே உருவாக்கி வைத்திருந்த எதிர்காலத்திட்டங்களில் இருந்து உருவானது. அந்தத்திட்டத்துடன் தான் அவர் இந்தியாவுக்கு வந்தார். தன் வாழ்நாள் முழுக்க பல படிகளாக அதைத்தான் செயல்படுத்திக் கொண்டிருந்தார். அது அவரது கிராமசுயராஜ்யம் என்ற பெருந்திட்டமே. அது ஓர் இந்திய அரசை உருவாக்கும் திட்டம் அல்ல. முழுக்கமுழுக்க ஓர் அரசின்மையை உருவாக்கும் திட்டம் !

ஆகவேதான் அவர் ஒருபோதும் சுதந்திரம் பெறுவதற்காக வெள்ளையருடன் போரிடுவதை மட்டுமே தன் செயல்திட்டமாக வைத்திருக்கவில்லை. சிலசமயம் பார்க்கும்போது சுதந்திரப்போராட்டமே இரண்டாம்பட்சமானது என்ற எண்ணம் அவருக்கு இருந்ததோ என்ற எண்ணம் எழுகிறது. அவர் கிராமநிர்ம்மாணம், கதர், ஹரிஜன இயக்கம் போன்ற இயக்கங்களையே அடிப்படைச் செயல்பாடாக கருதியிருந்தார். அவரைப்பொறுத்தவரை சுதந்திரப்போராட்டம் என்பது நம்மை நாமே கட்டி எழுப்பும் பணியே ஒழிய பிறரை வெற்றிகொள்ளும் பணி அல்ல

காந்தி இந்தியச் சுதந்திரப்போராட்டத்தை முடிந்தவரை அதிகமாக மக்களைத்திரட்டி நடத்த எண்ணியமைக்குக் காரணமும் இதுவே. அவர் மக்களை அரசியல்படுத்தவும் அவர்களின் விதியை அவர்களே தீர்மானிக்கச்செய்யவும் விரும்பினார். அவருக்கு முன்பிருந்த எந்த சுதந்திரப்போராட்டத்தலைவருக்கும் அத்தகைய கனவு இருக்கவில்லை,

அவர்கள் கல்வியும் விழிப்புணர்ச்சியும் கொண்ட சிறுபான்மையினரை திரட்டவே முயன்றார்கள். ஏன் காந்தியின் சமகாலத்து பிற தரப்பினர்கூட , மிகச்சிறந்த உதாரணம் அம்பேத்கார், வெகுமக்களை பெருமளவில் திரட்டி நடத்தும் இயக்கங்களில் ஆர்வம் கொண்டிருக்கவில்லை. காந்தியின் தேசிய உருவகம் கோடானுகோடி மக்களின் வாழ்க்கையை மொத்தமாக புதிதாகக் கட்டியெழுப்புவதாக இருந்தது.

**காந்தியின் கனவு தேசியம்**

இன்று இந்தியாவில் மிகச்சிலரே வாசித்திருக்கிற ஒரு நூலாக இருக்கிறது காந்தியின் ஹிந்து சுயராஜ்யம் என்ற குறிப்புடன் அந்தோனி பாரேல் அவரது ஹிந்து சுயராஜயா பதிப்பை வெளியிட்டார். உண்மைதான். அந்நூலை காந்தியர்களில் 'கடும்போக்கு' கொண்ட சிலர் ஒழிய பெரும்பாலானவர்கள் முன்வைப்பதில்லை.

அதற்குக் காரணம் 'நவீன' மனம் கோண்ட ஒருவருக்கு அந்நூல் மிக எதிர்மறையான ஒரு சித்திரத்தை அளித்துவிடும் என்பதே. நவீன கால நிர்வாகம்,அரசமைப்பு, உற்பத்தி-வினியோகமுறை, சமூக உறவுகள் ஆகியவற்றைப்பற்றி மட்டுமல்ல நவீன தொழில்நுட்பம் போக்குவரத்து ஆகியவற்றைப்பற்றிக்கூட எந்தப் புரிதலும் இல்லாமல் மிகவும் பழைமையான ஒரு மன உலகில் வாழ்ந்துகொண்டு உருவாக்கப்பட்ட பகற்கனவு என அந்நூல் அவனுக்குத் தோன்றக்கூடும்.

தென்னாப்ரிக்காவில் இருந்து வெளிவந்த 'இந்தியன் ஒப்பீனியன்' என்ற இதழில் தொடராக வெளிவந்தது இந்நூல். 1909ல் லண்டனில் இருந்து தென்னாப்ரிக்காவுக்கு செல்லும்போது வன்முறைசார்ந்த புரட்சிதான் சமூகத்தை உருவாக்குமா என்ற வினாவுக்கு பதிலாக தனக்குத் தோன்றியதை இந்நூலில் காந்தி சொல்கிறார். இந்தியாவில் அப்போது ஒரு வன்முறைப்புரட்சியை கொண்டுவந்து பிரிட்டிஷாரை வெல்வதைப்பற்றிய நம்பிக்கை நிலவியது. அந்த வழியே தென்னாப்ரிக்காவுக்கும் உகந்தது

என்றும் சொல்லப்பட்டது. காந்தி அதை நம்பவில்லை. அதற்கான பதிலை அவர் தனக்குள் தேடுகிறார்.

ஹிந்து சுயராஜ்யம் தன்னுடைய கொள்கைகளின் முழுவிளக்கமும் கொண்ட மையநூல் என்று காந்தி கருதினார். 1921ல் அந்நூலின் ஆங்கிலப்பதிப்புக்கு அவர் எழுதிய முன்னுரையில் ”என் கருத்தில் இந்நூலை ஒரு குழந்தைக்கும் வாசிக்கக் கொடுக்கலாம். இது வெறுப்புக்குப் பதிலாக அன்பின் நற்செய்தியை குழந்தைக்கு கற்பிக்கும். வன்முறையை தியாகத்தால் இடமாற்றம் செய்யும்” என்று எழுதினார்

தன் நூலில் ‘நவீன பண்பாடு’ குறித்து ஆழமான கண்டனம் இருப்பதாக காந்தி சொல்கிறார். அது முதல்வாசிப்பில் ஏற்க முடியாததாக தோன்றலாம் என்றும் சொல்கிறார். ஆனால் தனக்கு தன் கருத்துக்களில் ஆழமான நம்பிக்கை இருப்பதாகவும் இன்று இந்தியா இந்நூலில் உள்ள விஷயங்களுக்காக முதிர்ச்சி கொண்டிருக்கவில்லை என்றாலும் அது சாத்தியமாகும் என்றும் அவர் நம்பிக்கை தெரிவிக்கிறார். தன்னுடைய தேசிய விடுதலைப்போராட்டம் என்பது இந்த கிராமசுயராஜ்யக் கனவை சாத்தியமாக்கும் நோக்கம் கொண்டதே என அவர் அம்முன்னுரையில் திட்டவட்டமாகவே சொல்கிறார்.

அந்நூலின் அரசியல் செயல்திட்டத்தில் அகிம்சையை மட்டுமே தற்போது தன்னால் சோதனைசெய்துபார்க்க முடிந்திருக்கிறது என்று சொல்லும் காந்தி அதுவும் போதிய அளவுக்கு நடைமுறை வெற்றியை அளிக்கவில்லை என்று வருந்துகிறார். இந்தியாவின் சுதந்திரப்போராட்டத்தைப் பயன்படுத்திக்கொண்டு தன்னுடைய சொந்தப் பொருளியல் திட்டங்களை அமல்படுத்த தான் முயல்வதாகவும், அரசியலிலும் பொருளியலிலும் மதக்கருத்துக்களை புகுத்துவதாகவும், தான் செய்வது ஓர் அபாயகரமான ஆட்டம் என்றும் எழுந்த குற்றச்சாட்டுகளுக்கு தன்னுடைய திடமான அரசியல் பொருளியல் நம்பிக்கை இது என்றும், இதற்காகவே தான் அரசியலில் ஈடுபடுவதாகவும் காந்தி பதில் சொல்கிறார்.

ஹிந்து சுயராஜ்யத்தின் பொருளியல் அரசியல் கொள்கைகளை பிறிதொரு தருணத்திலேயே விரிவாகப் பேசவேண்டும். ஆனால் இன்று அந்நூலைப் படிக்கையில்கூட சாதாரண வாசகனுக்கு அதிர்ச்சியே உருவாகும். இவர் என்ன அரசாங்கம் அமைக்க வழிசொல்கிறாரா இருக்கும் அரசாங்கங்களைக் கலைத்து அராஜகம் உருவாக வழி சொல்கிறாரா என அவன் திகைப்படையக்கூடும். அதிஉணர்வாளர்களுக்கு [Excentrics] மட்டுமே உரிய ஒரு வகை கட்டற்ற எண்ணப்பாய்ச்சல் கொண்ட நூல் இது.

அன்றைய சூழலில் இந்திய அரசியல் தளத்தில் செயலாற்றிய எவருக்கும் நேரு,படேல்,சுபாஷ்,அம்பேத்கார் அனைவருக்குமே, இது ஒரு அந்தரங்கமான கிறுக்குத்தனம் என்றே தோன்றியிருக்கும். இவர்கள் எவருமே அரசின்மைவாதிகள் அல்ல என்பதே முக்கியமான காரணம். இவர்கள் எண்ணிக்கொண்டிருந்தது அரசுருவங்களைப் பற்றி. இவர்கள் எவருமே அதிஉணர்வாளர்களுமல்ல. ஆகவே தங்கள் காலகட்டம் தங்களுக்கு அளிக்கும் எண்ணங்களின் இயல்கையை தாண்டிச்சென்று சிந்திக்க இவர்களால் முடியவும் இல்லை.

எனக்கு என்ன தோன்றுகிறது என்றால் பிராமணியம் தொடர்பான கசப்பு ஒரு மனப்பீடிப்பு போல ஈ.வே.ரா அவர்களை அழுத்தியிருக்காவிட்டால் அவர் காந்தி சொன்னவற்றை சட்டென்று புரிந்துகொண்டிருக்கக் கூடும் என்று. இந்திய அரசியலில் அக்காலத்தில் அவர்தான் காந்தியைப்போல அரசின்மைவாதி. எல்லா எல்லைகளுக்கும் செல்லக்கூடிய அதிஉணர்வாளர்.

காந்தி ஹிந்து சுயராஜ்யம் வழியாக முன்வைக்கக்கூடிய தேசிய உருவகத்தை சுருக்கமாக இவ்வாறு சொல்கிறேன். அதை விரிவாக நூல்கள் வழியாகவே கற்க வேண்டும். காந்தியைப் பொறுத்தவரை முதல்பெரும் விழுமியம் என்பது சுதந்திரம். சுதந்திரம் என்பது பொறுப்புடன் இணைந்தது. பொறுப்பு என்பது தனிமனித ஒழுக்கம் மற்றும் சமூக நெறிகள் ஆகியவற்றை பேணுவதே. இத்தகைய முழுமையான சுதந்திரம் சாத்தியமாகக்கூடிய ஒரு சமூக அமைப்பை அவர் கற்பனைசெய்கிறார்.

ஒரு மனிதன் தன் வாழ்க்கையை தானே தீர்மானிக்கக்கூடியவனாக இருக்க வேண்டும். அதற்கு அவன் தன் சமூகத்தை தானே தீர்மானிக்கும் உரிமையுடன் இருக்க வேண்டும். மேலைநாடுகளில் இருந்த எளிமையான வாக்குரிமையை காந்தி இங்கே முக்கியமானதாக கருதவில்லை. தன்னை அடக்கியாளவேண்டிய சக்தி எது என்பதைத் தீர்மானிக்கவே அந்த வாக்குரிமை உதவுகிறது அவனுக்கு. அவனால் புரிந்துகொள்ள முடியாத, அவனால் நேரடியாகத் தொடர்புகொள்ள முடியாத ஒரு பெரிய அமைப்பின் பிரிக்கமுடியாத உறுப்பாக அவன் இருக்கும்போது அவனுக்கு உண்மையில் சுதந்திரம் என்பதே இல்லை.

சுதந்திரத்தைப் பறிக்கும் இன்னொரு முக்கியமான அம்சமாக காந்தி எண்ணுவது உலகியல் இன்பங்கள் மீதான பேராசை. அந்த ஆசையினால்தான் இந்தியா மேலைநாட்டினருக்கு அடிமையானது என்று காந்தி எண்ணுகிறார். நுகர்வு வெறி இயற்கையை அழிக்கிறது. பெருந்தொழில்நுட்பங்களை கொண்டுவருகிறது. பெரிய அளவில் ஆற்றலை தேவையாக்குகிறது. ஏராளமான மூலப்பொருட்கள் அதற்கு தேவையாகின்றன. ஆகவே மூலப்பொருட்களுக்கான மோதல் உருவாகிறது.

நுகர்வும் போரும் ஒன்றுடன் ஒன்று பிரிக்கமுடியாதவை என்பது காந்திய தரிசனம். அதாவது பெருமளவில் நுகர்வைக் கொண்ட ஒருசமூகம் போரிட்டபடியேதான் இருக்க முடியும். போர் பெரிய ராணுவங்களையும் அந்த ராணுவங்களை நிர்வகிக்கும் பெரிய அரசுகளையும் உருவாக்கும். அந்த அரசில் எளியமனிதன் வெறும் வரிகொடுக்கும் குடிமகனாக மட்டுமே இருக்க முடியும். அவனுக்கு சுதந்திரமும் நிறைவும் இருக்காது. நவீனப் பண்பாடு என்பது உடலை மகிழ்வித்து ஆன்மாவை அழிப்பது என்றார் காந்தி.

ஆன்ம விடுதலை என்பது காந்தியைப் பொறுத்தவரை அறிவார்ந்தது அல்ல. அதை செயல்மூலமே ஒருவர் அடைய முடியும். உடல்சார்ந்த உழைப்பை காந்தி மீளமீள வற்புறுத்துவது அதில் உள்ள படைப்பூக்கம் மனித அகத்தை விடுதலைசெய்வது என்பதனாலேயே. ஒரு மனிதனுக்கு அறிவார்ந்த

வளர்ச்சியும் தொழில்கள் மூலம் பெறும் ஆன்மீக மலர்ச்சியும் சேவை மூலம் பெறும் கருணையும் தேவைப்படுகிறது. ஆகவே பெருந்தொழில்கள் மூலம் வேலைப்பாகுபாடு நிகழ்வதை காந்தி நிராகரித்தார். அது மனிதனை சமூகத்தில் இருந்தும் உழைப்பில் இருந்தும் அன்னியப்படுத்தும் என்றார். அதன் விளைவாக செய்தொழிலில் அவனுக்கு இன்பம் இருக்காது, ஆகவே அவன் போலியான கேளிக்கைகளை நோக்கிச் செல்வான்

இவ்வாறாக மையப்படுத்தபப்ட்ட அரசு, ராணுவம் ,பெருவணிகம், போர்கள், பெருந்தொழில்நுட்பம், நுகர்வு ஆகியவற்றை ஒரே விஷயத்தின் வேறுபட்ட முகங்களாகக் காணும் காந்தி ஒட்டுமொத்தமாக இவற்றை நிராகரித்துவிட்டு ஒரு சமூக அமைப்பை உருவாக்க முடியும் என்று எண்ணுகிறார். அதுவே அவர் முன்வைத்த கிராமசுயராஜ்யம். அதையே எதிர்கால இந்தியாவின் தேச அமைப்பாக அவர் தன்னுடைய 'ஹிந்து ஸ்வராஜ்' என்ற நூலில் எழுதினார்.

காந்தி உருவகிக்கும் சமூகம் தன்னிறைவு கொண்ட சிறிய கிராமங்களை அடிப்படை அலகாகக் கொண்டது. அந்த மக்கள் தங்களுக்குத் தேவையான பொருத்தமான தொழில்நுட்பத்தை மட்டும் அங்கே பயன்படுத்திக்கொள்ளலாம். அந்த மக்களின் தேவைக்குரிய அனைத்தையும் அங்கே உருவாக்கிக் கொள்ள முடியும். அங்குள்ள பொருட்களால் வீடு கட்டலாம். அங்குள்ள நிலத்தில் உணவை உருவாக்கலாம். உடையை அவர்களே நெய்துகொள்ளலாம். ஒருவரை ஒருவர் சுரண்டுவதையும் அடக்கியாளுவதையும் அவர்கள் தவிர்த்தார்கள் என்றால் அவர்களுக்குத்தேவையான அனைத்தையுமே அவர்கள் அங்கே உருவாக்கிக் கொள்ளலாம்.

இந்த தன்னிறைவான கிராமங்கள் ஒன்றுடன் ஒன்று தேவையான அளவுக்கு மட்டும் வணிக உறவுகளை உருவாக்கிக் கொள்ளலாம். அதன் மூலம் அவை தங்களிடம் இல்லாதபொருட்களையும் அறிவையும் பிறரிடம் இருந்து பெற்றுக்கொள்ளலாம். ஒரு கிராம மக்கள் கண்டிப்பாக தங்கள் கிராமத்தைப்பற்றியும், சூழலைப்பற்றியும் நன்றாக அறிந்திருக்க வேண்டும் என்று காந்தி எண்ணினார். அங்குள்ள வேளாண்மை மற்றும்

தொழில்களுக்கான வாய்ப்புகளை அவர்கள் கற்றிருக்க வேண்டும். புதிய இயல்கைகளை அவர்கள் கண்டுபிடிக்கவேண்டும்.

தன் சொந்த மண்ணைப்பற்றி தெரியாமல் வாழ்வதை அறியாமை என்று காந்தி எண்ணினார். தன் மண்ணைப்பற்றி ஒருவன் உண்மையிலேயே அறிந்திருப்பான் என்றால் அவனால் தேவையான அனைத்தையும் அங்கிருந்து உருவாக்கிக் கொள்ளமுடியும். குறைந்த செலவில் நல்ல வீடுகளை கட்ட முடியும். நல்ல உடைகளை உருவாக்க முடியும். இந்த அறிதல்கள் பல்லாயிரம் வருடங்களாக பாரம்பரியமாக கைமாற்றப்பட்டு வந்தவை. அவற்றை தொழில்முறைபகுப்பான வருணாசிரமமும் சாதிமுறையும்தான் அறுபடாத தொடர்ச்சியாக நீடிக்கச் செய்தன என்று நம்பிய காந்தி ஏற்றத்தாழ்வு இல்லாத ஒரு வர்ணாசிரம முறை என்பது அறிவு தலைமுறைமாற்றத்தால் அறுபடாமல் நீடிப்பதற்கு இன்றியமையாதது என்றார்.

சிறிய தொழில்குழுக்கள் தொழில்ஞானத்தை சிறப்பாக பேணுவதை அவர் அவதானித்தார். இந்தியச் சூழலில் தொழிற்குழுக்களே சாதியாக இருக்கின்றன என்றார். பிற்பாடு பல்லாயிரம் வருடத்து வரலாறுள்ள சாதி தன்னுடைய ஏற்றத்தாழ்வு மனநிலையை ஒருபோதும் தவறவிடாது என உணர்ந்த காந்தி சாதி அடிப்படையிலான தொழிற்குழுக்கள் தேவையில்லை என்றார். எல்லாசாதியினரும் தங்களை தொழிலாளர்களாக உருவகித்துக்கொள்ளும் ஒரு உற்பத்திமுறை தேவை என்றார்.

காந்தியின் கிராமசுயராஜ்யத்தின் சிறப்பு என்னவென்றால் அங்கே பகிர்வுப்பரவல் [வினியோகம்] மிக எளிமையாகவும் நேரடியாகவும் நடைபெறுகிறது என்பதே. உற்பத்தியும் பகிர்வுப்பரவலும் ஒரே இடத்தில் ஒரே காலத்தில் நிகழ்கின்றன. எது தேவையோ அது மட்டுமே உற்பத்தி செய்யப்படுகிறது. உற்பத்திசெய்பவர்கள் நேரடியாக தேவையானவர்களுக்குக் கொடுக்கிறார்கள். ஆகவே பெரிய அளவிலான பண்டப்போக்குவரத்து தேவையில்லை. ஆகவே காந்தி பெரிய அளவிலான போக்குவரத்தை தவிர்க்கவேண்டும் என்றார். ‘உடனடியாக ரயில்கள்

தேவையில்லை என்று சொல்லமாட்டேன், ஆனால் அவை இல்லாமலாகும் என்றால் அது நல்லதே’ என்றார்!

இந்த தன்னிறைவுள்ள கிராமங்கள் தங்களை தாங்களே ஆட்சிசெய்கின்றன. அவை வெளியே இருந்து அதிகமாகப் பெறுவதில்லை. ஆகவே அவை அதிகமாகக் கொடுக்கவும் வேண்டியதில்லை. அவை சேர்ந்து ஒட்டுமொத்த ஆட்சியமைப்புகளை உருவாக்கலாம். அத்தகைய ஒரு மைய அமைப்பே காந்தி உருவகித்த மத்திய அரசு. அதற்கு ராணுவமோ காவல்துறையோ உளவமைப்போ தேவையில்லை. அதற்கு பிரம்மாண்டமான ‘அரசு இயந்திரம்’ தேவை இல்லை. ஏனென்றால் அது பெரிய அளவில் எதையும் நிர்வாகம்செய்வதில்லை. ஆகவே அது முற்றிலும் அகிம்சை அரசாக இருக்கும்.

காந்தியின் இந்த கிராமசுயராஜ்யத்தை பற்றி கேட்டதுமே ஒரு ‘நவீன’ மனம் ”என்ன அபத்தம் இது!’ என்றே எதிர்வினை ஆற்றும். தான் வாழ்ந்துகொண்டிருப்பது மிகுந்த தர்க்கபூர்வமான ஓர் உலகில் என்றும் காந்தி ஒரு கிறுக்குக் கனவுலகில் வாழ்ந்து அபத்தங்களைச் சொல்லிக்கொண்டிருந்தார் என்றும் எண்ணும்.

ஆனால் கிராமசுயராஜ்ய கோட்பாட்டை காந்தியப் பொருளாதாரம் என்ற தளத்தில் விரிவடையச்செய்தவரான பொருளியல் மேதை ஜே.சி.குமரப்பா ஒருமுறை சொன்னார், நவீனமனம் ஒரு போதும் தான் வாழும் உலகின் பேரபத்தங்களைப் பார்ப்பதில்லை என. உதாரணமாக பெரும்பாலான நவீன அரசுகள் ஆட்சியமைப்பை தக்கவைத்துக்கொள்ளவும் நடத்திச்செல்லவும்தான் மிகப்பெரும்பாலான பணத்தைச் செலவிடுகின்றன. அரசு இயந்திரம் எதற்காகச் செயல்படுகிறது என்றால் வரி வசூல் மற்றும் நிதி நிர்வாகத்துக்காக. அந்த வரி எதற்காக என்றால் அரசு இயந்திரத்தை செயல்படச்செய்வதற்காக! எவ்வளவு தர்க்கபூர்வமாக இருக்கிறது இல்லையா?

இன்னொரு உதாரணம், இன்றைய நவீன அரசுகள் வளர்ச்சித்திட்டங்களுக்காகச் செலவிடுவதை விட பலமடங்கு ராணுவத்துக்குச் செலவிடுகின்றன. உலகமெங்கும் ராணுவத்துக்குச் செலவிடப்படும் தொகை உலகமெங்கும் உள்ள வறுமையை ஐந்தே வருடங்களில் ஒழித்துவிடும். ஏன் ராணுவத்துக்குப் பணம் செலவிடப்படுகிறது, அமைதிக்காக! ஏன் அமைதி கெடுகிறது, வறுமையினால்!

காந்தியின் கிராமசுயராஜ்யம் என்ற கருதுகோள் வளர்ச்சி, சுதந்திரம் எல்லாவற்றையும் கீழிருந்து, சாதாரண மனிதனில் இருந்து கணக்கிட ஆரம்பிப்பதன் மூலம் உருவாவது. சோஷலிசம் உள்ளிட்ட பிற அரசமைப்புகளின் கருதுகோள்கள் அனைத்துமே வளர்ச்சி, சுதந்திரம் போன்றவற்றை மேலிருந்து, மையத்தில் இருந்து கணக்கிடுகின்றன. கன்யாகுமரி மாவட்டத்தில் ஏரியை தோண்ட டெல்லியில் பணம் அனுமதிக்கபப்ட்டு பம்பாய் நிறுவனம் வரவேண்டும் என்ற நிலை யாருக்குச் சாதகமனாது? கணக்குகளின்படி தேசம் முன்னேறிக்கொண்டே இருக்கும், பட்டினியும் பெருகிக்கொண்டே இருக்கும் என்பதே இதன் விளைவாகும்.

இங்கே திட்டங்கள் ஒளிவிடத்தான் செய்யும், விளைவுகள் ஒன்றுமிருக்காது. கேரள காந்தியவாதியான பேராசிரியர் எம்.பி.மன்மதன் ஒருமுறை சொன்னார் "சராசரி இரண்டடி ஆழமுள்ள ஏரியில் நாலடி உயரமுள்ள பசு மூழ்கிச்செத்தது என்றால் இந்த வளர்ச்சிவாதிகள் சண்டைக்கு வருவார்கள். புள்ளிவிவரங்களை எடுத்து வீசுவார்கள்"

### இன்றைய இந்திய தேசியமும் காந்தியும்

காந்தி அன்றைய இந்திய தேசவிடுதலைப்போரில் ஈடுபட்டவர்கள் முன்வைத்த இருவகை தேசிய உருவகத்தையும் திட்டவட்டமாக நிராகரிக்கிறார். 1909ல் காந்தி லண்டனில் வினாயக் தாமோதர் சவார்க்கரை இரண்டாம் முறையாகச் சந்தித்து விரிவான விவாதித்தார். பண்பாட்டு

தேசியத்தை முன்வைத்த சாவர்க்கர் ஒரு ராணுவ மைய அரசு இந்தியாவில் அமையவேண்டும் என்ற கனவில் இருந்தார். 1909ல் லண்டனில் அரசுச்செயலர் வில்லியம் கர்ஸான் வைல் [William Curzon-Wyllie] சாவர்க்கரின் மாணவரான மதன்லால் திங்ராவால் கொல்லப்பட்டார். இந்தத் தருணத்தில் லண்டனுக்கு தென்னாப்ரிக்க போராட்டம் குறித்த பேச்சுவார்த்தைக்காக வரும் காந்தி அன்றைய பிரிட்டிஷ் அரசின் கடும் மனகசப்பைப் புறக்கணித்து கண்காணிப்புகள் நடுவே சாவார்க்கரின் நண்பர் சியாம்ஜி கிருஷ்ண வர்மாவின் அறையில் தங்க முடிவெடுத்தார்.

ஏற்கனவே 1906 சாவர்க்கரைச் சந்தித்த போது காந்தி தன்னுடைய அகிம்சைப்போராட்டத்துக்கு அவரை இழுக்க முனறு தோற்றார். 1909ல் வன்முறைப்போராட்டத்துக்கான மனநிலை உச்சநிலையில் காணப்பட்டது. இந்திய தேசிய காங்கிரஸை கைப்பற்றி நேரடிப்புரட்சிக்கு இட்டுச்செல்லும் வழிகள் பேசப்பட்டன. அச்சந்திப்புக்குப் பின்னர் தென்னாப்ரிக்காவுக்கு திரும்பும்போதுதான் கில்டொமான் கேஸில் [[Kildoman Castle] கப்பலில் பயணம் செய்யும்போது காந்தி தன்னுடைய ஹிந்து சுயராஜ்யத்தை எழுதினார். அந்நூல் திட்டவட்டமாகவே சாவார்க்கரின் ஹிந்து மையத்தேசியத்தை நிராகரிப்பது. இந்திய அரசியலில் இன்றுவரை அந்த ஹிந்துமையத்தேசியத்துக்கு எதிராக விளங்கும் அரசியல் நிலைபாடு அந்தப்பயணத்தில் காந்தி உருவாக்கி வாழ்நாள் முன்வைத்ததே. அதற்காகவே அவர் உயிர்த்தியாகமும் செய்தார்.

அதே வீச்சில் காந்தி நேருவின் தாராளவாத அரசுருவகத்தையும் நிராகரிப்பதை நாம் காணலாம். முப்பத்தெட்டு வருடங்களுக்குப்பின்னர் இந்தியா சுதந்திரத்தை நெருங்கிக்கொண்டிருந்த போது வருங்கால இந்தியா எப்படி அமையவேண்டும் என்ற தன் கனவை கிராமசுயராஜ்யம் என்ற அடிப்படையிலேயே காந்தி முன்வைத்தார். காங்கிரஸின் அடுத்தகட்ட தலைவர்கள் கிட்டத்தட்ட அனைவருமே அதற்கு எதிரானவர்கள் என்று காந்தி அறிந்திருந்தார். ஜனநாயகவாதி, மதச்சார்பற்றவர், இலட்சியவாதி என்ற அடிப்படையில் காந்தி நேருவை தன் வாரிசாக முன்னிறுத்தினார். ‘என் குரலில் இனி நேரு பேசுவார்’ என்ற காந்தியின் வரியே பிறகு நேருவுக்கு அசைக்க முடியாத வலிமையை உருவாக்கி அளித்தது

ஆனால் நேருவுக்கு கிராமசுயராஜ்யம் என்ற திட்டத்தில் இம்மிகூட ஆர்வம் இல்லை என்பதையும் அதை அவர் ஒரு அபத்தமான, கிறுக்குத்தனமான கனவாக மட்டுமே கருதுகிறார் என்றும் காந்தி புரிந்துகொண்டிருந்தார். நேருவின் கனவு பெருந்தொழில்கள், உயர்தொழில்நுட்பம், மையநிர்வாகம் கொண்ட ஒரு தாராளவாத அரசைச் சார்ந்தவையாக இருந்தன. ஆனாலும் காந்தி தன் கிராமசுயராஜ்ய திட்டத்தை சுதந்திரத்துக்குப் பின்னால் உருவாகும் தேச நிர்மாண திட்டத்தில் சேர்ப்பதற்காக நேருவை கேட்டுக்கொண்டார். நேரடியாக விவாதிப்பதை நேரு தவிர்க்கிறார் என்று புரிந்ததும் மீண்டும் மீண்டும் காந்தி நேருவுக்கு அதுகுறித்து கடிதங்கள் அனுப்பினார்.

ஆனால் நேரு விவாதத்துக்கே வரவில்லை. அதில் விவாதிப்பதற்கே ஏதுமில்லை என்றே அவர் எண்ணினார். இந்தியாவுக்குத் தேவையானது பெருமுதலீடு, பெருந்தொழில், பெருந்திட்டங்கள் என்பதில் அவர் ஐயமற்றிருந்தார். அவர்முன் முன்னுதாரணங்களாக ஸ்டாலினின் சோவியத் ருஷ்யாவும் தியோடர் ரூஸ்வெல்ட்டின் அமெரிக்காவும் இருந்தன. காந்தி அவரது இறப்புக்குச் சிலநாட்கள் முன்னால் வரை கிராமசுயராஜ்யத்துக்காக நேருவிடம் வாதாடியதை, ஏன் மன்றாடியதை, நாம் அக்கடிதங்களில் காண்கிறோம். கிராமசுயராஜ்யம் தவிர எந்த ஒரு அமைப்பும் இந்தியாவின் எளிய விவசாயிகளை அன்னியப்படுத்தும் என்றும், அவர்களை பெருமுதலாளிகளிடம் அடிமைப்படுத்தும் என்றும் கடிதங்களில் காந்தி வாதிடுகிறார்.

காந்தி 1948ல் கொல்லப்பட்டது மிகவசதியான ஒரு திருப்பம். அஷிஸ் நந்தி அவரது கட்டுரை ஒன்றில் கோட்ஸே காந்தியை கொன்றாலும்கூட அக்காலகட்டத்தில் வாழ்ந்த பலரது ஆழ்மன விருப்பே அவர் வழியாக நிறைவேறியது என்று சொல்கிறார். நேருவுக்கு அதற்குள்ளாகவே காந்தி ஒரு பெரும்தடையாக மாறிவிட்டிருந்தார். காந்தியின் கைராட்டை, கிராமநிர்மாணம் போன்றவற்றை நேரு எப்போதுமே பெரிதாக எடுத்துக்கொண்டது இல்லை. அவை மக்களை திரட்டுவதில் ஆற்றும்

மகத்தான பங்களிப்பைக் கண்டு அவற்றை சகித்துக்கொண்டார் என்றுதான் சொல்லவேண்டும்.

ஆனால் நாடு விடுதலையடையும் தருணத்தில் காந்தி அவரது கிராமசுயராஜ்ய கொள்கைகளை அவ்வளவாக முன்வைக்கமாட்டார் என நேரு நினைத்திருக்கலாம். ஆனால் காந்திக்கு அவரது வாழ்க்கையின் மையப்பணியே அதுவாகத்தான் இருந்தது. நேரு காந்தியை சமாளிக்க முடியாமல் திணறினார். பிற்பாடு கனடாவின் பிரதமராக ஆனவரும் நோபல் பரிசுபெற்ற அமைதிப்பேச்சுவார்த்தையாளருமான லெஸ்டர் பியர்ஸனிடம் [ Lester B. Pearson] நேரு காந்தியை 'கிழட்டு சுயஏமாற்றுக்காரர்' [ Old hypocrite] என்று சொன்னதாக அவர் தன் சுயசரிதையில் குறிப்பிட்டிருப்பதாக லாயிட் ரூடால்ப் அவரது பின் நவீனத்துவ காந்தி என்ற நூலில் சொல்கிறார்.

இருக்கலாம். காந்தி அவரது கடைசிக்காலத்தில் இந்தியப்பிரிவினையின்போது வெடித்துக்கிளம்பிய மாபெரும் வன்முறையைச் சமாளிக்க தன்னுடைய மொத்த கவனத்தையும் திருப்பியமையால்தான் கிராமசுயராஜ்யம் குறித்த காந்தியின் அழுத்தத்தை எதிர்கொள்ளாமல் நேரு தப்ப முடிந்தது. அரசியல் நிர்ணய சபை நடவடிக்கைகள் வலுப்பெறுவதற்குள் காந்தி கொல்லவும்பட்டார். மேலும் சிலவருடங்கள் காந்தி உயிருடன் இருந்திருந்தால் நேருவின் இந்திய உருவாக்கத்துக்கு எதிராக காந்தி உண்ணாவிரதம் இருந்திருப்பார். நேருவால் அதை சமாளிக்க முடிந்திருக்காது. காந்திக்குப் பின்னர் காந்தியப்பொருளாதாரத்தைப் பற்றிப் பேசியவர்களான ஜெ.சி.குமரப்பா போன்றவர்களை நேரு முன்னேற்றத்துக்குத் தடையாக அமையும் முட்டாள்கள், பழமைவாதிகள் என வெறுத்து ஒதுக்கினார்.

நேரு உருவாக்கிய பொருளாதார-சமூகக் கட்டமைப்பு எப்படிப்பட்டது என்பதை விரிவாகவே விவாதிக்கவேண்டும். அவரது கோட்பாடு கலப்புப் பொருளாதாரம் எனப்பட்டது. ஒருபக்கம் பிரசாந்த சந்திர மகாலானோபிஸ் [Prasanta Chandra Mahalanobis] வடிவமைத்த மையப்படுத்தப்பட்ட பொருளியல் மற்றும் சோஷலிச கனவுகள் கொண்ட நலத்திட்டப்பணிகள். மறுபக்கம்

தாராளவாத நோக்குள்ள சமூக அரசியல் கட்டமைப்பு. நேருவின் குழப்ப மனநிலையை இது மிகச்சரியாகவே பிரதிநிதித்துவம் செய்தது. நேரு மன அளவில் ஒரு தாராளவாதி. தாராளவாதச் சமூகமே சிறந்த குடியாட்சிமுறையை உருவாக்கும் என நம்பினார். ஆகவே பாராளுமன்ற அரசியல், நிர்வாகம் போன்றவற்றில் தாராளவாதத்தை மேற்கொண்டார்

ஒரு சமூகம் தன்னுடைய உட்கூறுகளின் இயல்பான முரணியக்கத்தால் முன்னகர்வதே தாராளவாதப் பொருளியலின் அடிப்படை. ஆனால் நேரு நேற்மாறான சோவியத் பாணி மையப்பொருளாதார முறையை நம்பினார். மூலதனத்தை குவித்து பெருந்தொழில்களை உருவாக்கினார். அதன் பொருட்டு நேரு அதிகாரம் அனைத்தையும் மையத்தில் குவிக்கும் அரசை வடிவமைத்தார். அதன் விளைவாக அதிகார வர்க்கம் அபரிமிதமான வலிமையைப் பெற்றது. லைசன்ஸ் ராஜ் எனப்படும் அமைப்பு உருவாகியது. அது தாராளவாதத்துக்கே எதிராக அமைந்தது. ஆகவே தாராளாவாத முகம் கொண்ட அதிகாரவற்க அரசே அவரால் உருவாக்கபப்ட்டது.

நேருவின் கொள்கைகள் காரணமாக சாதகமும் பாதகமுமான விளைவுகள் உருவாயின. இந்தியா சுதந்திரம் அடைந்தபோது மாபெரும் பஞ்சங்களின் பிடியில் இருந்தது. உணவு உற்பத்தி கொஞ்சம்கூட போதாதநிலையில் இருந்தது. நேருவின் பிரம்மாண்டமான பாசனநிர்மாணத்திட்டங்கள் வேளாண்மைநிலத்தைப் பெருக்கி உணவுற்பத்தியை இரட்டிப்பாக்கி உணவுத்தன்னிறைவை உருவாக்கின. நாடு முழுக்க சாலைகள், மின்சாரம்,செய்தித்தொடர்பு போன்ற அடிப்படைக்கட்டுமானங்கள் உருவாயின. இன்று நாம் காணும் நவீன இந்தியாவின் அடித்தளம் நேருவால் உருவாக்கப்பட்டதே.

இந்தியா இன்றும் ஜனநாயக நாடாக திகழ்வதற்கான அடிப்படைகளையும் உருவாக்கியவர் நேருவே. ஜனநாயகத்துக்கான அடிப்படை மனநிலைகளை அவர் தொடர்ச்சியாக முன்வைத்தார். அவரும் அம்பேத்காரும் உருவாக்கிய அரசியல் சட்டம் ஜனநாயகப் பாதுகாப்பு நிறுவனங்களுக்கு சட்டபூர்வமான

பாதுகாப்பளித்தது. சுதந்திர இந்தியாவில் அவற்றின் பங்களிப்பு மிகவும் முக்கியமான ஒன்றாகும்.

ஆனால் எதிர்விளைவுகள் பல நேருவின் கலப்புப் பொருளாதாரத்தால் உருவாயின. இந்திய இயற்கைச்செல்வம் நேருவின் காலத்திலேயே மாபெரும் கட்டுமானத்திட்டங்களால் பெருமளவு அழிக்கப்பட்டுவிட்டது. அதன் விளைவுகளை இந்தியா இன்று அனுபவிக்கிறது. கட்டுப்படுத்தப்பட்ட தொழில்துறை நெடுங்காலம் இயல்பான வளர்ச்சி இல்லாமல் தேங்கி நின்றது. விளைவாக பதுக்கல் ,கள்ளவணிகம் , முற்றுரிமை வணிகம் போன்றவை உருவாகி இந்தியப்பொருளாதாரத்தை மேலும் தேங்கச்செய்தன.

அனைத்தையும்விட முக்கியமாக, இந்தியாவில் சுதந்திரத்துக்குப் பின் உருவான அதிகாரிகள்வர்க்கம் இந்நாட்டின் மாபெரும் சாபக்கேடாக இன்றும் நீடிக்கிறது. ஒருபக்கம் அவர்களுக்கு சோஷலிசபாணியில் முற்றதிகாரங்கள் அளிக்கப்பட்டன. மறுபக்கம் அவர்கள் தாராளவாத அரசியலமைப்பில் அதன் சட்டங்களால் பாதுகாக்கப்பட்டார்கள். அதாவது எதையும் செய்யலாமென்ற அதிகாரமும் எதிலிருந்தும் தப்பிவிடலாம் என்ற சுதந்திரமும் அவர்களுக்கு அளிக்கப்பட்டது. அவர்கள் மேலிருந்துகொண்டு அடிமட்டம் வரை இந்தியநிர்வாகத்தை முழுமையாகச் சீரழித்து ஊழல்மயமாக்கினார்கள். இன்று இந்தியா சந்திக்கும் மாபெரும் சவாலே இந்தக் கும்பலை எப்படி அகற்றுவது என்பதுதான்.

இந்தவிஷயத்தில் நேருவை திட்டவட்டமாக எச்சரித்தவர் ராஜகோபாலாச்சாரியார். ராஜாஜி தேர்ந்த நிர்வாகி என்று பெயரெடுத்திருந்தும்கூட அதிகாரிகளைக் கட்டுப்படுத்துவதற்காக வாதிட்டார். மைய அதிகாரத்தால் கட்டுப்படுத்தப்படாத சுதந்திரச் சந்தையே அதிகாரிகளின் ஆதிக்கத்தை தடுக்கும் என்று சொன்னார். அதாவது உண்மையான தாராளவாதத்துக்காக கோரினார். அக்கோரிக்கை முற்றாக உதாசீனம் செய்யப்பட்டது.

ஆக, காந்தியின் மறைவுக்குப் பின்னர் இந்தியாவில் உருவானது காந்தி கனவு கண்ட தேசியம் அல்ல. இந்த அரசமைப்பின் வெற்றிகளுக்கும் தோல்விக்கும் நேருவும் அம்பேத்காரும் மகாலானோபிஸ¤ம் தான் காரணமானவர்கள். இன்றைய இந்தியா  சரியான பொருளில் காந்தி தேசம் அல்ல. 1951ல் இந்திய அரசியல்நிர்ணயசபை அரசியல் சட்ட முன்வரைவை சமர்ப்பித்தபோது அதில் இருந்த காந்தியவாதிகள் ஆழமான அதிருப்தியை அடைந்தார்கள். மகாவீர் தியாகி போன்ற உறுதியான காந்தியவாதிகள் அது காந்தியத்துக்கு கட்டப்பட்ட சமாதி என்றே சொனனர்கள்.

ஆனால் அந்த போக்கு காந்தி இருக்கும்போதே ஆரம்பித்துவிட்டது. 1947ல் இந்திய தேசியக்கொடி வடிவமைக்கப்பட்டபோது முன்னர் இருந்த இந்திய தேசியக்கொடியில் இருந்த கைராட்டை நீக்கம்செய்யப்பட்டு அசோகச் சக்கரமாக ஆக்கப்பட்டது. அது அம்பேத்காரின் விருப்பம் என்று சொல்லப்படுகிறது. ராட்டை நீக்கம்செய்யப்பட்டது காந்தியைப் புண்படுத்தியது. அது இல்லாத கொடியை தன்னால் இந்தியதேசியக்கொடியாக ஏற்கமுடியாது என்றார் அவர். ஆனால் ராட்டையின் சக்கரம்தான் அந்த கொடியில் இருக்கிறது என்று அவரிடம் சாக்குபோக்குதான் சொன்னார்கள்.

இந்திய அரசியல் நிர்ணய சபையில் கிராமசுயராஜ்யம் குறித்த கோரிக்கை எழுந்ததுமே அம்பேத்கார் அதை தீவிரமாக நிராகரித்தார். காந்தியின் கிராமசுயராஜ்யம் என்பது தன்னிறைவு கொண்ட ஒரு நவீன அரசின்மைச் சமூகத்தின் அடிப்படை அலகாக அமையும் கிராமம். ஆனால் அம்பேத்கார் அதை பழைய நிலப்பிரபுத்துவ சமூக அமைப்பின் அடிப்படை அலகாக அமையும் கிராமம் என்று எடுத்துக்கொண்டார். மூடநம்பிக்கையும் சாதிவெறியும் பழமைவாதமும் கலந்து தேங்கிநாறும் ஓர் அமைப்பு என அம்பேத்கார் கிராமங்களை எண்ணினார். அவற்றை மையப்படுத்தப்பட்ட உற்பத்திமுறை மூலம் நவீனத்தொழில்நுட்பம் மூலம் உடைத்து வீசவேண்டும் என்று அறைகூவினார். அதுவே நேருவின் கருத்தும். அவர்கள் உருவாக்கிய அரசே இங்கே இன்றும் நீடிக்கிறது.

ஆனால் இந்த தேசத்தின் முகப்படையாளமாக காந்தி இன்றும் நீடிக்கிறார். ஆகவே சாமானியர்கள் இன்றுள்ள இந்திய தேசியத்தின் சிற்பி என்று காந்தியையே எண்ணுகிறார்கள். சாதாரண விவாதங்களில் இன்றுள்ள தேசக்கட்டுமானமும் அரசியல் சூழலும் 'காந்தி வாங்கிக்கொடுத்த சுதந்திரம்' என்று பேசபப்டுகிறது. இந்த தேசத்தின் எல்லா சரிவுகளுக்கும், குறைகளுக்கும் அவரே காரணமாக காட்டப்படுகிறார்.

இந்திய தேசியத்தையும் காந்தியையும் வேறுபடுத்திப் பார்ப்பது ஒருவகையில் சாத்தியமில்லைதான். ஆனால் காந்தி கண்ட இந்தியா இதுவல்ல. காந்தியின் இந்தியா அடித்தள மக்களில் இருந்து , நிர்வாகத்தின் கீழ்நுனியில் இருந்து மேலே செல்வதாகும். இன்றைய இந்தியா டெல்லியில் இருந்து கீழே இறங்கி வருகிறது. இந்த தலைகீழ் வேறுபாடு மிகமிக முக்கியமானது.

காந்தி சுதந்திரத்திற்குப் பின் காங்கிரஸ் அடித்தளக் கட்டுமானப் பணிகளில் ஈடுபடும் ஓர் அமைப்பாக தன்னை மாற்றிக்கொள்ள வேண்டும் என்றும் அரசியல்கட்சியாகச் செயலாற்றக்கூடாது என்றும் சொன்னார். இதை அவர் 'ஒரு பேச்சுக்காகச்' சொல்லவில்லை என்பதை வரலாற்றைப் பார்த்தால் தெரிந்துகொள்ளலாம். 1919ல் இந்திய அரசாங்க சட்டம் மூலம் இந்தியர்கள் ஆட்சியில் பங்கெடுக்கும் முறை பரிந்துரைக்கப்பட்டபோது காந்தி அதற்கு எதிராக கிராமநிர்மாண திட்டங்களுக்கு காங்கிரஸை திருப்பினார். அதேபோல 1932ல் வகுப்புவாரி அறிவிக்கைக்குப் பின் தேர்தலரசியல் முன்னேழுந்தபோது அவர் காங்கிரஸை ஹரிஜன இயக்கம் நோக்கி கொண்டுசென்றார்.

காந்தி உருவாக்க எண்ணிய இந்தியாவை தொழில்நுட்பத்துக்கு எதிரானதும் பெருமூலதனக்குவிப்புக்கு எதிரானதும் தனிமனிதர்களின் அகச்சான்றை நம்பி அமைக்கப்பட்டதுமான ஓர் பன்மைச்சமூகம் என்று சொல்லலாம். அதாவது காந்தியின் தேசிய உருவகம் என்பது வருங்காலம் சார்ந்து உருவாக்கப்பட்டது. அதன் இலட்சிய சமூகம் எதிர்காலத்தில்தான்

இருந்தது. அந்த இலட்சிய சமூகத்துக்குத்தான் காந்தி ராமராஜ்யம் என்று பெயரிட்டார்.

அந்தப்பெயரை அவர் தன் வைணவ பக்தி மரபில் இருந்து எடுத்துக்கொண்டார். அது அவரது இலட்சியக்கனவின் பெயர் மட்டுமே. மற்றபடி ராமர் காலத்து சமூக அமைப்பை மீண்டும் கொண்டுவரவேண்டும் என்று அவர் சொல்லவில்லை. அச்சமூக அமைப்பு எப்படி இருக்கும் என்றும் அவர் அறிந்திருக்கவில்லை. அவரது சமூக உருவகம் எந்த தொல்பழங்காலத்தையும் நோக்கி ஏங்குவதாக அமையவில்லை. அது மேலைநாட்டு அறிவுச்சூழலில் பிறந்த அரசின்மைவாதத்தின் அரிய கனிகளில் ஒன்று.

இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடைத்தபின்னர் இந்திய அரசியலில் பலவகையான தரப்புகள் உருவாகிவந்தன. பிரிட்டிஷ் ஆட்சிககலத்தில் பிரிட்டிஷாருக்கு ஆதரவாகவும் இந்திய சுதந்திரத்துக்கு எதிராகவும் இருந்த சக்திகள் சுதந்திர இந்தியா அளித்த ஜனநாயக வாய்ப்புகளை பயன்படுத்திக்கொண்டு தேர்தலரசியலில் இறங்கின. அவர்களின் சமூகப்பிளவுவாத, தேசப்பிரிவினைவாதப் பிரச்சாரங்கள் ஜனநாயகத்தில் சிலசமயம் வெற்றியும் பெற்றன. உதாரணம் திராவிட இயக்கம், அகாலி தள் போன்றவை.

இவர்கள் சுதந்திரப்போராட்ட காலத்தில் காந்திக்கும் காங்கிரசுக்கும் எதிராக, பிரிட்டிஷாருக்கு ஆதரவாகச் சொல்லிவந்த அதே வாய்ப்பாடுகளை காங்கிரஸ் என்ற மையக்கட்சிக்கு எதிராகச் சொல்லத்தலைப்பட்டார்கள். காலப்போக்கில் இந்த நோக்கில் சுதந்திரப்போராட்டத்தைப் பற்றி திரிபுபட்ட வரலாறுகளையும் விளக்கங்களையும் எழுதினார்கள். இன்றைய இளைஞனுக்கு கிடைப்பது ஒருபக்கம் அரசாங்கத்தின் பாடப்புத்தக வரலாறு. மறுபக்கம் பிளவுவாதப் பிரச்சாரம். இவற்றுக்கு நடுவே வரலாற்றை நடுநிலையுடன் பார்ப்பதற்கான வெளியே இந்தியச் சூழலில் இல்லை.

இந்த இரு தரப்பாலும் இந்தியதேசியம் என்பது இன்றுள்ள இந்திய அரசாங்க அமைப்பின் கருத்தியலாக முன்வைக்கப்படுகிறது. இந்திய அரசாங்கம் என்பது இந்தியதேசியத்தின் மீது அமைந்திருக்கிறது என்பது உண்மை. ஆனால் இந்திய தேசியம் என்பது அது அல்ல. அது இந்த தேசத்தின் மக்களின் மனநிலையில் உள்ளது. அந்த மக்களில் பெரும்பாலானவர்களின் மனநிலையில் தேசம் என்ற கருத்து நீடிக்கும் வரை அது இருக்கும். அந்த அகவயமான கருத்துநிலையே இந்திய தேசியமாகும்.

அந்த தேசியப்பிரக்ஞையின் நேரடியான வடிவம் அல்ல இந்திய அரசு என்பது. எந்த ஒரு அரசும் அந்த மக்களின் நேரடியான பிரதிநிதி அல்ல. அந்த மக்களின் தேசியப்பிரக்ஞை அந்த அரசை உருவாக்கும் சக்திகளில் ஒன்று என்று மட்டுமே சொல்ல முடியும். அந்த மக்கள் அரசியல் பிரக்ஞையும் ஜனநாயக விழிப்புணர்வும் ஒற்றுமையும் கொண்டவர்களாக இருந்தால் மட்டுமே அந்த தேசியபிரக்ஞை அவர்களின் அரசாங்கத்தை உருவாக்குவதில் தீர்மானிக்கும் பங்களிப்பைச் செலுத்த முடியும். இல்லையேல் அது பலவீனமான ஒரு தரப்பாகவே எஞ்சும்

இந்தியாவில் உள்ள பொருளியல் அதிகார மையங்கள், பல்வேறு வெளிநாட்டுச் செல்வாக்குகள் ஆகியவற்றுடன் இந்திய மக்களின் தேசியப்பிரக்ஞையும் பங்குபெறும் ஒரு பெரிய முரணியக்கத்தின் சமரசப்புள்ளியே இந்தியாவின் அரசமைப்பு. அது இந்திய தேசியத்தின் முகமாகக் காட்டப்படுகிறது அவ்வளவுதான். இந்திய மக்களின் மனதில் உள்ள இந்திய தேசியம் என்பது அவர்களின் எதிர்பார்ப்புகளும் கனவுகளும் கலந்த ஒன்று.

அது என்ன என்பதை இந்தியாவின் பண்பாட்டுப்பின்புலத்தில், வரலாற்றுத் தொடர்ச்சியில், இன்றைய  இந்தியாவின் இலட்சியங்களில் தான் தேட வேண்டும். ஆனால் அதற்கு முன் இந்திய தேசியத்தைப்பற்றி நமக்கு அளிக்கப்பட்டிருக்கும் எதிர்மறைப் பிம்பங்களை பார்ப்போம்.

## இந்திய தேசியம் யாருக்கு எதிரி?

இந்தியாவின் நவீனத் தேசிய உருவாக்கத்தின் வரலாற்றைப் பார்க்கும் ஒரு நடுநிலையான ஆய்வாளர் அது பல்வேறு படிநிலைகள் வழியாக வளர்ந்து வந்திருப்பதைப் பார்ப்பார். இந்திய பக்தி இயக்கத்தின் கடைசியில் அந்த இயக்கத்தின் இன்றியமையாத நீட்சியாக இந்து சீர்திருத்த/ மறுமலர்ச்சி இயக்கங்கள் உருவாகிவந்தன. தன்னுடைய கட்டுரை ஒன்றில் யூ.ஆர்.அனந்தமூர்த்தி பக்தி இயக்கத்துக்கும் சீர்திருத்த இயக்கத்துக்கும் உள்ள உறவென்பது ராமகிருஷ்ண பரம ஹம்சருக்கும் விவேகானந்தருக்குமான உறவு என்கிறார்.

இந்துமதச் சீர்திருத்த இயக்கங்கள்தான் இந்தியா ஒரு கலாச்சாரதேசம் என்பதை தர்க்கரீதியாக முன்வைத்தவை. இந்த நாடு அரசியல்ரீதியாக பொருளியல்ரீதியாக தனிநாடுகளாக இருந்தாலும் பல்லாயிரம் வருடங்களாக ஒரே பண்பாட்டுக்கட்டமைப்பாக இருந்துவருகிறது, ஆகவே இதை ஒரு தேசியம் என்றே சொல்ல வேண்டும் என்று அவை கண்டடைந்தன. ஆரம்பகால இந்து மதச்சீர்த்திருத்தவாதிகள் அனைவருமே தங்கள் எழுத்துக்களில் அதை வலுவாகச் சொல்லியிருக்கிறார்கள்.

அதுவல்லாமல் இன்று சிலர் கூறுவதுபோல இந்திய தேசியம் என்பது பிரிட்டிஷ்காரரர்களின் உருவாக்கம் அல்ல. பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவில் இருந்த பல தனித்தேசங்கள் மீது ஒட்டுமொத்தமான ஒரு மேலாதிக்கமாக இருந்ததே ஒழிய நாற்பத்தேழில் இந்தியாவை விட்டுச்செல்வதுவரை பிரிட்டிஷார் இந்தியாவை ஒரே அரசியல் அமைப்பாகவோ, ஒரே பொருளாதார அமைப்பாகவோ, ஏன் ஒரே நிர்வாக அமைப்பாகவோ கூட ஆக்கவில்லை என்பது மிகச்சாதாரணமாக எவரும் வாசித்தறியக்கூடிய உண்மை. உதாரணமாக திருவிதாங்கூர் பிரிட்டிஷாருக்குக் கப்பம் கட்டியதே ஒழிய மற்றபடி ஒரு தனி அரசியல்,பொருளியல் தேசமாகவே சுதந்திரம் வரை நீடித்தது. அப்படி பற்பல சம்ஸ்தானங்கள் இருந்தன. அதைத்தவிர பிரெஞ்சு, போர்ச்சுக்கல் பகுதிகள் தனி அரசியல்தேசங்களாகவே நீடித்தன.

இந்தியாவை ஒரு தேசமாக கடைசிவரை பிரிட்டிஷார் ஒத்துக்கொள்ளவுமில்லை. பிரிட்டிஷார் காங்கிரஸ¤டன் நடத்திய எல்லா சர்ச்சைகளிலும் இந்தியா என்பது ஒரே தேசமல்ல, ஆகவே காங்கிரஸ் இந்திய தேசத்தை பிரதிநிதிகரிக்கவில்லை என்றே வாதிடுவதைக் காணலாம். 1947ல் பிரிட்டிஷார் இந்தியாவை விட்டுவிட்டுச் செல்லும்போதுகூட இந்தியாவை தனித்தேசங்களாகவே விட்டுச்சென்றார்கள். இந்தியாவின் எந்த ஒரு தேசத்துக்கும் தனியாகப்போகும் உரிமை உண்டு என்ற நிபந்தனையை வைத்தே அதிகாரத்தைக் கொடுத்தார்கள். இந்தியாவின் தனிநாடுகள் ஒருபோதும் ஒரு ஒற்றைத் தேசியமாக ஆக ஒத்துக்கொள்ளாது என்றும் ஆகவே இந்தியா போரிட்டு அழியும் என்றும் நினைத்தார்கள்.

ஆனால் பிரிட்டிஷாரை அதிர்ச்சி கொள்ளவைத்தபடி ஓரிரு மாதங்களில் இந்தியா ஒரே தேசமாக ஆகியது. அதற்கு பெரிய படையெடுப்புகளோ போர்களோ தேவையாக இருக்கவில்லை. இந்தியாவெங்கும் பல்வேறு சம்ஸ்தானங்களில் இருந்த மக்கள் அந்தந்த அரசர்களுக்கு எதிராகத் திரண்டு போராடி இந்தியாவை ஒரே தேசமாக ஆக்கினார்கள். ஆனால் இந்தியா ஒரே தேசமாக ஆனபின் இந்தியா என்ற தேசியத்தை நிகழ்த்தியது தாங்களே என வெள்ளையர்களின் வரலாற்றாசிரியர்கள் சொல்ல ஆரம்பித்தார்கள்.

இதேமோசடிதான் இஸ்லாமிய வரலாற்றாசிரியர்களும் செய்வது. இந்தியா ஒரே தேசமல்ல என்று அவர்கள் நாற்பத்தேழு வரை வாதிட்டார்கள். அதன் அடிப்படையிலேயே அவர்கள் தனிநாடு கோரினார்கள். ஹைதராபாத் போன்ற இஸ்லாமிய சம்ஸ்தானங்கள் தனிநாடுகள் என்றார்கள். இந்தியா பல நாடுகளாகச் சிதறும் என்று எழுதினார்கள். மாறாக இந்தியா வலுவான ஒரே நாடாக இணைந்தபோது அந்த இணைப்பை அக்பர் நடத்தினாரா, இல்லை ஷெர்ஷா நடத்தினாரா, இல்லை முகமதுகோரியே செய்துவிட்டாரா என்ற விவாதங்களில் ஈடுபடுகிறார்கள்.

இந்தியாவை பட்டேல் எப்படி ஒற்றுமைப்படுத்தினார்? ராணுவ வல்லமை மூலம் அல்ல. ஒப்புநோக்க அந்தப் பெரும்பணிக்கு மிகமிகக் குறைவாகவே

படைபலம் பயன்படுத்தப்பட்டிருந்தது. அன்று இந்திய சம்ஸ்தானங்கள் இந்திய மைய அரசுக்கு எதிராகப் போரை தொடுத்திருக்க முடியுமா? முடியும், அந்த அரசுக்குள் இருந்த மக்கள் அந்த அரசுகளை ஆதரித்திருந்தால். தேசப்பிரிவினையின் விளைவான மதப்பிரிவினையால் அன்றைய பிரிட்டிஷ் இந்திய ராணுவம் பலவீனமாக இருந்தது. அதன் முக்கியமான வெள்ளைய தளபதிகள் வெளியேறிவிட்டிருந்தார்கள். மக்களாதரவுடன் சம்ஸ்தானங்கள் போரிட்டிருந்தால் இந்திய அரசு தாக்குபிடித்திருக்காது.

பட்டேலுக்கு உதவியப் பெரும் சக்தி அந்தந்த சம்ஸ்தானங்களில் இருந்த மக்கள்தான். அவர்கள் ஏற்கனவே காங்கிரஸால் ஒருங்கிணைக்கப்பட்டிருந்தார்கள். அவர்கள் ஏற்கனவே ஒரு தேசமாக இருந்தார்கள். தனிநாடு கோரிய திருவிதாங்கூர் திவான் சி.பி.ராமசாமி அய்யரை மக்களே மூக்கை வெட்டி துரத்திவிட்டார்கள். ஐதராபாதில், கோவாவில் இணைப்புக்குத் தயங்கிய எல்லா சம்ஸ்தானங்களிலும் மக்களியக்கம் எழுந்துதான் இணைப்பை சாத்தியமாக்கியது.

ஆக இந்தியாவை ஒரு தேசமாக ஆக்கிய சக்திகள் இரண்டு. ஒன்று , பல்லாயிரம் வருடங்களாக இங்கே இருந்து வந்த பண்பாட்டுத்தேசியத்தின் அடித்தளம். இரண்டு அதை அடையாளம் கண்டுகொண்டு ஒரு அகில இந்திய இயக்கமாக முன்னெடுத்த இந்து சீர்திருத்த இயக்கங்கள், அவற்றின் விளைவாக உருவான இந்திய மறுமலர்ச்சி. அவற்றில் இருந்தே காங்கிரஸ் தன்னுடைய தேசிய உருவகத்தை பெற்றுக்கொண்டது.

இந்தியாவில் இருந்த, இன்றும் இருக்கும், இந்தப் பண்பாட்டுத்தேசிய உருவகத்தை அபத்தமாக மறுக்கும் வாதங்கள் எழுதிக் குவிக்கப்படுகின்றன. மார்க்ஸிய அறிஞரான கெ.சச்சிதானந்தன் எனக்களித்த பேட்டியில் இதை வரலாற்று ரீதியாகவே மறுக்கிறார். ‘இந்தியாவில் உருவான எந்த ஒரு இயக்கமும் இந்தியாவைத்தழுவி விரிவதாகவே இருந்தது. வைதிக மதம், சமணபௌத்த மதங்கள், பக்தி இயக்கம், இந்து சீர்திருத்த இயக்கங்கள், இந்திய தேசவிடுதலை இயக்கம்.

அது மட்டுமல்ல, இடதுசாரி எழுச்சி, நக்சலைட் எழுச்சி, தலித் எழுச்சி போன்றவையும் ‘பான் இண்டியன்’ தன்மை கொண்டவையே’ என்றார் அவர்

விவேகானந்தர் நடத்திய பவிராஜக யாத்திரை இமயம் முதல் கன்யாகுமரி வரை நீண்டது. அதில் உள்ளடங்கியிருப்பது ஒரு இந்திய பண்பாட்டுத்தேசிய மனவரைபடம். அதே பயணத்தை பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்கு முன் ஆதிசங்கரர் இங்கிருந்து வடக்கே நோக்கி நடத்தினார். அந்த வரைபடம் எப்போதுமே இந்தியாவில் இருந்தது. அதை அரசியல் வரைபடமாக மாற்றியது இந்துசீர்திருத்த இயக்கங்களும் காங்கிரஸ¤ம் என்று சொல்லலாம்.

வேடிக்கை என்னவென்றால், இந்தியா எப்போதுமே ஒரு தேசமாக இருந்ததில்லை என்று சொல்பவர்கள் தமிழகம் மட்டும் ஒரு தேசமாக இருந்தது என்பார்கள்! தமிழகம் மட்டுமல்ல இந்தியாவின் எந்த மாநிலமும் உறுதியான அரசியல் தேசியமாக இருந்ததில்லை என்பதே வரலாற்று உண்மை. இந்திய அரசியல் தேசியம் உருவானதற்கான வரலா¡ற்றுக்காரணம் ஒன்றே ஒன்றுதான். பல்லாயிரம் வருடங்களாக மக்கள் இடம்பெயர்ந்து ஒருவரொடொருவர் கலந்து இந்த நிலப்பகுதியில் வாழ்கிறார்கள். அவர்கள் ஏற்கனவே ஓர் ஒற்றைச் சமூகமாகவே இருக்கிறார்கள். ஆகவே அவர்கள் இணைந்து வாழ வழிவகைசெய்யும் ஒரு தேச உருவகமே மோதலைத்தடுத்து அவர்களை முன்னேற்றப்பாதையில் இட்டுச்செல்லும். .

இந்த தேசிய உருவகம் இங்குள்ள இந்த இன்றியமையாமையில் இருந்து எழுந்தது. இங்குள்ள மக்களுக்கு மேலான ஒருவாழ்க்கை தேவை என்ற பெரும் கனவில் இருந்து எழுந்தது. ஆகவே ஒற்றுமை, புரிந்துணர்வு ஆகியவற்றின் அடிப்படையில் அது காங்கிரஸாலும் காந்தியாலும் நவீனத்தேசியமாக உருவாக்கப்பட்டது. பட்டேலாலும் அம்பேத்காராலும் அது நிகழ்த்தப்பட்டது.

இது ஒற்றைத்தேசியமல்ல என்று விடாமல் கூறிவந்தனர் அன்றைய பிரிட்டிஷ் வரலாற்றறிஞர்களும் பிரிட்டிஷ் அரசும். இந்த தேசத்துக்குள் தேசங்களை கண்டுபிடித்து தனித்தனியே அவற்றை வளர்க்க முற்பட்டனர். முஸ்லீம்களையும் சீக்கியர்களையும் தனித்தேசங்கள் என்றனர். தலித்துக்கள் தனித்தேசம் என்றனர். கூர்க்காக்கள் தனித்தேசம் என்றனர். அந்த பிரிவினைப்போக்குகளை இந்தியாவின் கலாச்சார ஒற்றுமையை வைத்தே எதிர்கொண்டது காங்கிரஸ்.

முஸ்லீம்கள் தனித்தேசக்கொள்கையை முன்னெடுத்து இந்த நிலப்பகுதியை பிரித்தனர். ஆனால் அவர்களில் பெரும்பகுதியினர் இன்றும் இந்த நிலத்தில் இந்த தேசியத்திற்குள்தான் வாழ்கிறார்கள். ஒருவேளை நாளை ஒரு தமிழ்த்தேசியம் அமைந்தாலும் அவர்கள் அதற்குள்தான் வாழ்ந்தாகவேண்டும். இதுவே அவர்கள் ஒரு தனித்தேசியம் என்ற கோரிக்கை எத்தனை அபத்தமானது என்பதற்கான ஆதாரம். ஆனால் இன்றும்கூட முஸ்லீம் வரலாற்றாசிரியர்கள் அந்த தனித்தேசியக் கோரிக்கையில் இருந்த முட்டாள்தனத்தை ஒப்புக்கொள்வதில்லை. அதன் மூலம் நிகழ்ந்த மானுட அழிவுக்குப் பொறுப்பேற்பதில்லை. வழக்கம் போல அந்தப்பழியையும் காந்திதலையில் போட்டுவிடுகிறார்கள். எவ்வளவு அறுபுதமான தலை! பூமி மாதிரி, எதையும் தாங்கும்!

அதேபோல திராவிட இனவாதம் இங்கே ஒரு பிரிவினைத்தேசியமாக முன்வைக்கப்பட்டது. அந்த வாதத்தின் அபத்தம் சில வருடங்களுக்குள் வெளிவந்தது. திராவிடர்கள் என அவர்கள் சுட்டிய கன்னடர்களோ தெலுங்கர்களோ மலையாளிகளோ அதை இம்மியும் பொருட்படுத்தவில்லை. உடனே அது மொழித்தேசியமாக உருமாற்றம் செய்யப்பட்டது. தமிழ்பேசும் மக்கள் ஒருகோடிப்பேர் இந்தியா முழுக்க உள்ளார்கள். தமிழ்நாட்டு மக்களில் குறைந்தது நான்கு கோடிப்பேர் தமிழ் பேசுபவர்கள் அல்ல. அவர்களை அன்னியப்படுத்தமல் தமிழ்த்தேசியம் நிலைநிற்காது. ஆகவே ஒரு மாபெரும் மானுட அவலத்தையே மொழித்தேசியம் உத்தேசிக்கிறது என்பது வெளிப்படை.

இன்றைய இந்தியாவில் ஆக முற்போக்கான, ஆக நடைமுறைச் சாத்தியம் கொண்ட, ஆக மானுடநேயம் கொண்ட தேசிய உருவகம் என்பது நவீன இந்திய தேசியம்தான். அது இந்துக்கள், முஸ்லீம்கள்,சீக்கியர்கள்,கிறித்தவர்கள் உட்பட அனைவரையும் அரவணைத்துக்கொள்வதாகவே உருவகிக்கப்பட்டிருக்கிறது. எவரையும் இரண்டாம் குடிமக்களாக ஆக்கும்படியாக அதன் கோட்பாட்டுக் கட்டமைப்பு இல்லை. எவரையும் அது மேலாகவோ கீழாகவோ நிறுத்தவில்லை. அதன் ஜனநாயக அமைப்புக்குள் தன் வலிமையைத் திரட்டிக்கொள்ளும் எந்த ஒரு சமூகமும் அதன் அதிகாரத்தை அடையமுடியும் என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது, மீண்டும் மீண்டும் நிரூபிக்கப்படுகிறது.

இதற்கு மாற்றாக முன்வைக்கப்படும் தேசியங்கள் இனவாத, மதவாத, மொழிவாத ·பாசிஸக் கோட்பாடுகளை தங்கள் அடிப்படைக் கட்டமைப்பாகக் கொண்டவையாகவே உள்ளன. அவை தங்களுக்குள் உள்ள ஒரு பெரும்பகுதி மக்களை ‘பிறர்’ ஆக பார்ப்பவை. அவர்களை இரண்டாம்குடிமக்களாக உருவகித்துக்கொள்பவை. எந்தவகையான ஜனநாயக அடிப்படையும் இல்லாதவை.

இதற்குக் காரணம் நவீன இந்திய தேசியம் என்பது காந்தியாலும் நேருவாலும் வளர்த்து இன்றைய நிலைக்கு கொண்டுவரப்பட்டது என்பதே. அவர்கள் எந்த இன, மொழி, மத அடிப்படையிலும் அந்த தேசியத்தை உருவகிக்கவில்லை. அவர்களின் ஒட்டுமொத்த எழுத்திலும் அவர்கள் ‘பிறனை’ உருவகிப்பதை நாம் பார்க்க முடியாது.மீண்டும் மீண்டும் ஒத்துப்போவதைப்பற்றி விட்டுக்கொடுப்பதைப்பற்றி சேர்ந்து இயங்குவதைப்பற்றி மட்டுமே அவர்கள் பேசுகிறார்கள். இறந்தகாலத்தின் கனவில் இருந்து அவர்கள் தங்கள் தேசிய உருவகத்தை அடையவில்லை வரும்காலம் குறித்த இலட்சியத்தில் இருந்து அடைந்தார்கள்.

காந்தி உருவகித்த எதிர்கால இலட்சியத்தை நேரு பெரும்பாலும் நிராகரித்தார். ஆனால் அவர் காந்தியிடம் இருந்து பெற்றுக்கொண்டது ஒற்றுமையையும் விட்டுக்கொடுத்தலையும்

ஜனநாயகத்தையும் தன் அடிப்படை விதிகளாகக் கொண்ட ஒரு தேசிய உருவகத்தைத்தான். நேரு காந்தி சொன்னதற்கு மாறாக மையநிவாகம்கொண்ட தாராளவாத அரசு ஒன்றை அமைத்திருக்கலாம். ஆனால் அவரது அரசு அதன் எந்த நிலையிலும் ஒரு ஜனநாயக அமைப்பாக மட்டுமே இருந்தது.

இந்திய தேசபிரிவினைக்குப் பின்னர் இஸ்லாமியர் மீது இந்தியாவில் இருந்த கசப்பு வளராமல் தடுத்தவர் நேரு. இஸ்லாமியர் தங்கள் தேசப்பற்றை நிரூபிக்கவேண்டும் என்று பட்டேல் எண்ணினார், ஏனென்றால் பாகிஸ்தான் பிரிவினையை ஆதரித்து முஸ்லீம்லீகுக்கு வாக்களித்த கோடிக்கணக்கான தென்னக மக்கள் பாகிஸ்தானுக்குச் செல்லாமல் இங்கேதான் இருந்தார்கள். ஆனால் நேரு இந்தநாடு அவர்களுக்கும் உரியதே என்றார். அவர்களையும் உள்ளடக்கியதே தன்னுடைய தேச உருவகம் என்றார் அவர். இன்றும் அதுவே நீடிக்கிறது.

ஆனால் தேசத்தைப்பிளந்து ரத்த ஆறை ஓடவிட்ட சில வருடங்கள் கூட ஆகாத நிலையில் மீண்டும் தன்னை ஒருங்கிணைத்துக்கொண்ட முஸ்லீம் லீக் அமைப்பு இந்திய அரசு என்பது ஓர் இந்து அரசு, இது பார்ப்பன-பனியா தேசியம், இதற்குள் நாங்கள் இணையமுடியாது என்று மீண்டும் பேச ஆரம்பித்தது. அப்போதுகூட நேரு அவர்கள் தங்கள் நலன்களுக்காக இணைந்து போராடும் உரிமையை அளிக்கும் ஒரு நவீனத்தேசியத்தையே தான் உருவகிப்பதாகச் சொன்னார். அவர்கள் மத அடிப்படையில் திரள்வார்கள் என்றால் அதுவும்கூட தன் தேசிய உருவகத்துக்குள் ஏற்றுக்கொள்ளத்தக்கதே என்றார். அதற்கிணையான இன்னொரு முற்போக்குத்தேசியம் இந்த மண்ணில் இன்றுவரை முன்வைக்கப்படவில்லை என்பதே வரலாற்று யதார்த்தம். பதிலுக்கு அந்த நேருவை இந்துவெறியர் என்றார்கள் அவர்கள்!

நேரு உருவாக்கிய அந்த தேசியம்தான் உலகின் எந்த ஒரு நாட்டிலும் இன்றுவரை உருவானதிலேயே ஆகச்சிறந்த அணைத்துப்போகும் தன்மை

கொண்டது. அமெரிக்க தேசியத்தைவிட, பிரிட்டிஷ் தேசியத்தைவிட ! சட்டபூர்வமாகவும், நடைமுறையிலும், அடிப்படை மனநிலையிலும்....ஐயமிருக்கும் எவரும் உலக வரலாற்றை மேலோட்டமாகவேனும் புரட்டிப்பார்க்கலாம். அந்த தேசியத்தை விமரிசிக்கும் பிரிவினை-பிளவுவாதச் சக்திகளே காந்தியும் நேருவும் உருவாக்கிய தேசிய உருவகத்தைப் பற்றிய அவதூறுகளைக் கிளப்புகின்றன. அவற்றின் மொழி, இன அடிப்படைவாத பிளவுக்கருத்தியலுக்கு இந்திய தேசியம் எதிரியாகத் தெரிவதில் எந்த ஐயமும் இல்லை. அவை பிளவுபடுத்த நினைப்பவற்றை இந்திய தேசியம் ஒருங்கிணைக்கிறது.

மிகச்சிறந்த ஓர் உதாரணம், கண்முன் நடந்தது. இந்தியாவில் பேசப்படும் தமிழ்த்தேசியவாதத்தின் நீட்சியே இலங்கையில் ஈழத்தேசியமாக உருவாகியது. அந்தத் தேசியம் ஒரு குறைந்தபட்ச ஆட்சியதிகாரத்தை அடைந்தபோது அதனால் இஸ்லாமியர்களை உள்ளே வைத்துக்கொள்ள முடியவில்லை. அது இஸ்லாமியரை முழுக்க ஒட்டுமொத்தமாக அகதிகளாக விரட்டி அடித்தது. அந்தச் செயலை தமிழகத்து தமிழ்த்தேசியர்கள் மிக மிக இயல்பாக, தவிர்க்கமுடியாத ஒன்றாக எடுத்துக்கொண்டார்கள் என்பதையும் நாம் கண்டோம்.

அந்த பிளவுபடுத்தும் தேசியத்திற்கும் இந்திய தேசியத்திற்கும் இடையே ஒரு எளிய ஒப்பீட்டை நடத்தினால்கூட எது முற்போக்கானது என்பது எவருக்கும் தெரியும். இன்றும் இரு பாகிஸ்தான் போர்களுக்குப் பின்பு, ஏராளமான தீவிரவாதச் செயல்பாடுகளுக்குப் பின்பு, இந்திய அரசையும் இந்திய தேசியத்தையும் அவை தங்கள் அரசும் தங்கள் தேசியமும் அல்ல என்றும் தாங்கள் ஒரு இஸ்லாமிய அரசின் கீழ் மட்டுமே வாழமுடியும் என்றும் இஸ்லாமிய அமைப்புகளில் கணிசமானவை மீண்டும் மீண்டும் சொல்லிக்கொண்டிருக்கும் நிலையிலும்கூட, இந்திய தேசிய உருவகம் என்பது இஸ்லாமியர்களை உள்ளடக்கியதாகத்தான் நீடிக்கிறது.

அந்தத் தேசிய உருவகம் முழுமையானது என்றோ, பிழைகள் அற்றது என்றோ சொல்லவில்லை. ஆனால் இதை விட மேலான, இதைவிட

முற்போக்கான, இதைவிடச்சிறப்பான ஜனநாய அடிப்படையும் ஒருங்கிணைக்கும் வல்லமையும் கொண்ட ஒரு தேசிய உருவகத்தை நாம் கனவுகாணலாம், அதற்காகப் போராடலாம். ஆனால் இந்த தேசியத்துக்கு மாற்றாக இன்று முன்வைக்கப்படும் பிரிவினைத்தேசியங்கள் எல்லாமே இன்னும் பழங்காலத்தை நோக்கி திரும்பி அமர்ந்து சென்ற பொற்காலங்களைப்பற்றிய கனவுகளை அசைபோடும் பழமைவாத தேசியங்கள். நூற்றாண்டுகளாக தங்களுடன் வாழும் மக்களில் பாதியினை அன்னியப்படுத்தும் ·பாஸிச தேசியங்கள்.

இன்னும் வேடிக்கை என்னவென்றால், இந்த ·பாஸிச பிரிவினைத்தேசியங்கள் இந்திய தேசியத்தில் எதையெல்லாம் குறைகளாகச் சொல்கிறார்களோ அதையெல்லாம் இவர்களேதான் உருவாக்கினார்கள் என்பதே. ஒற்றுமையையும் புரிந்துணர்வையும் முன்வைக்கும் இந்திய தேசியத்துக்கு எதிராக அவநம்பிக்கைகளையும் எல்லைக்கசப்புகளையும் வளர்த்தவர்கள் இவர்களே. இப்போது இவர்களே அவற்றைச் சுட்டி இந்தியா ஒரு தேசமல்ல என்கிறார்கள்!

இந்திய தேசியத்தை காந்தியின் உருவாக்கமாக முன்வைப்பவர்கள் அதை பல்வேறு வகையாக முத்திரை குத்த காந்தியை தங்களுக்கு ஏற்றார் போல் அவதூறு செய்கிறார்கள். இன்று இந்தியாவில் பிறந்த ஓர் இளைஞன் சாதாரணமாக காந்தியைப்பற்றியும் இந்தியாவைப்பற்றியும் இந்த அவதூறுகளையே அதிகமும் கேட்டிருப்பான். அவற்றை அவன் நம்புவதற்கான காரணம் அவன் இளைஞன் என்பதே. பள்ளிக்கூட வரலாற்றுக்கு மாற்றாக எது சொல்லிக்கொடுக்கப்பட்டாலும் அவன் நம்புவான் என்பதே. அப்போதுதானே அவன் புரட்சிக்காரன் ஆக முடியும்?

மிகக்குறைவானவர்களே வரலாற்றுப் பின்னணியில் அந்த அவதூறுகளை வைத்து அவற்றின் பெறுமதியை ஆராய்கிறார்கள். அதற்கு ஓர் அடிப்படை வாசிப்பும் வாழ்க்கை சார்ந்த பார்வையும் தேவை. அந்த முதிர்ச்சி நிலை வருவதற்குள் பெரும்பாலானவர்கள் வாசிப்பையும் அரசியல் விவாதங்களையும் நிறுத்திவிடுகிறார்கள். லௌகீக வாழ்க்கையில் அமைந்தும் விடுகிறார்கள். ஆனால் அந்த இளமைப்பருவ

மனப்பிம்பங்களை வாழ்நாள் முழுக்கத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருப்பார்கள்.

**பார்ப்பன-பனியா தேசியமா?**

இந்திய சுதந்திரப்போராட்ட அரசியலில் ஒவ்வொரு தரப்பும் மறுதரப்பை அன்னிய ஆட்சியின் கைக்கூலிகள் என்று குற்றம் சாட்டியிருக்கிறது. ஹிந்துமகாசபை டாக்டர் மூஞ்சேயின் தலைமையில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு ஒத்துழைத்து காங்கிரஸை அழிக்கும் முயற்சிகளுக்கு உதவும் சக்தியாக நெடுங்காலம் செயல்பட்டிருக்கிறது. அதைச்சுட்டிக்காட்டும் காங்கிரஸார் சாவார்க்கர் அனுபவித்த நெடுங்காலக் கொடும் சிறைவாசத்தை மறைத்துவிடுவார்கள். சமீப காலமாக சாவார்க்கரே பிரிட்டிஷாருக்கு மன்னிப்புகடிதம் எழுதிக்கொடுத்த துரோகிதான் என இடதுசாரி அரசியல்வாதிகள் சொன்னார்கள்.

அதேபோல கம்யூனிஸ்டுகள் இரண்டாம் உலகப்போரில் பாசிச சக்திகள் ஒடுக்கப்படவேண்டும் என்ற சர்வதேச நோக்கில் இந்திய தேசிய காங்கிரஸின் கடைசிக்கட்டப் போராட்டங்களை எதிர்த்து பிரிட்டிஷாருடன் ஒத்துழைத்தார்கள். ஆகவே அவர்கள் தேசத்துரோகிகள் என்று கம்யூனிச எதிர்ப்பாளர்கள் பலகாலமாகச் சொல்லிவந்தார்கள். கம்யூனிஸ்டுத்தலைவர்களில் பலர் நெடுங்காலம் இந்திய சுதந்திரப்போராட்டத்தின் முன்னணி வீரர்களாக இருந்தவர்கள் என்ற உண்மை அங்கே பேசப்படவில்லை.

காங்கிரஸும் காந்தியும் மேலே சொன்ன இரு தரப்பாலும் இதே போல முத்திரை குத்தப்பட்டன. இந்துமகாசபை மற்றும் அதன் வழித்தோன்றல்கள் காந்தியை இந்தியாவில் உருவாகவிருந்த ஷத்ரிய புரட்சியை தவிர்ப்பதற்காக தென்னாப்ரிக்காவில் இருந்து வெள்ளையரால் கொண்டுவரப்பட்ட ஐந்தாம்படையாகச் சித்தரித்தன. இன்று அக்கருத்தில் இருந்து அவர்களில் ஒரு தரப்பினர் பின்வாங்கியிருக்கிறார்கள்.

அதேபோல கம்யூனிஸ்டுகள் இந்தியாவில் உருவாகவிருந்த சோஷலிச மக்கள்புரட்சியை மழுங்கடிக்க பிரிட்டிஷாருடன் இணைந்துகொண்டு ஐந்தாம்படை வேலை செய்தவர் என்று காந்தியைச் சித்தரித்தார்கள். இடதுசாரிகளின் முக்கியமான சிந்தனையாளர்கள் எவரும் இந்தவகையில்

சித்தரிக்கவில்லை என்றாலும் கணிசமான பக்கங்கள் இந்நோக்கில் எழுதப்பட்டிருக்கிறது.

ஆனால் காந்தியைப் பற்றிய மிகக்கசப்பான விமரிசனத்தை முன்வைத்தது முஸ்லீம்லீக்தான். காந்தி உருவாக்குவது 'பார்ப்பன- பனியா' தேசியம் என்ற வரியை முதன்முதலில் உருவாக்கியவர் பாகிஸ்தான் போராட்டத்தை முன்னெடுத்த ஜின்னா. இந்த வரியை அவர் மீண்டும் மீண்டும் சொல்லிக்கொண்டிருந்தார். இன்றும் பாகிஸ்தானிய ஊடகங்கள் அவ்வரியையே ஒட்டுமொத்த இந்தியாவைப்பற்றிச் சொல்லும்போதும் குறிப்பிடுகின்றன. அந்த வரியை அக்காலத்திலேயே தெற்கே இருந்த திராவிட இயக்கங்கள் கடன் வாங்கின. இன்றும் தமிழகத்தில் ஒருதரப்பினர் அவ்வரியை சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்.

ஏன் 'பார்ப்பன-பனியா' என்ற சொல் இணைப்பு உருவாக்கப்பட்டது? ஜின்னாவின் காலகட்டத்திலும் சரி, அதற்கு முன்பும் சரி, இந்திய தேசிய காங்கிரஸ் இந்தியாவின் எல்லா தரப்பினரும் பங்கொள்ளும் ஒரு பொதுமேடையாகவே இருந்தது. பல்லாயிரம் பேதங்கள் கொண்ட இந்தியாவை பிரதிநிதிகரிக்கும் ஓர் அமைப்பு எப்படி இருக்குமோ அப்படித்தான் அது எப்போதும் இருந்தது. அதனுள்யைந்தியாவின் சமூகத் தரப்புகள் அனைத்துக்கும் பிரதிநிதிகள் இருந்தனர். அவர்களுக்குள் ஓயாத போராட்டமும் பூசலும் இருந்தது. மகத்தான இணைக்கும் சக்தியாக காந்தி இருந்தபோதும் சரி, உருக்குபோன்ற சர்வாதிகாரத்துடன் இந்திரா காந்தி இருந்தபோதும் சரி ,கோஷ்டிச்சண்டை இல்லாமல் காங்கிரஸ் இல்லை. ஆகவே அது ஒரு இயல்பான வெளிப்பாடு என்றே சொல்லவேண்டியிருக்கிறது

இந்தியச் சுதந்திரப்போராட்டத்தை முன்னெடுத்தவர்கள் பிராமணர்கள். அவர்களே ஆங்கிலக் கல்விக்குள் சென்றவர்கள். நவீன உலகசிந்தனையுடனும் ஐரோப்பிய தேசியவாதத்துடனும் அறிமுகம் பெற்றவர்கள். ஆகவே இந்துமதச் சீர்திருத்தம், இந்திய கலையிலக்கிய மறுமலர்ச்சி, இந்திய தேசியப்போராட்டம் மூன்றிலும் அவர்களே முன்னோடிகள். உதாரணமாக, மலையாளம் தவிர இந்தியாவின் எந்த மொழியை எடுத்துக்கொண்டாலும் அந்த மொழியின் இலக்கிய மறுமலர்ச்சி என்பது பிராமணர்களால்தான் தொடங்கப்பட்டிருக்கும். பின்னர் இடைநிலை உயர்சாதிகள் அதில் பங்கெடுத்திருப்பார்கள்

எழுபதுகளுக்குப்பின்னர் பிற்படுத்தப்பட்டவர்கள். எண்பது தொண்ணூறுகளுக்குப் பின்னர் தலித்துக்கள். இதுவே இந்திய சமூக வளர்ச்சியின் வரைபடம். காங்கிரஸ், கம்யூனிஸ்டுக் கட்சி போன்றவற்றின் வளர்ச்சியின் வரைபடமும் இதுவே.

காங்கிரஸின் இரண்டாம் கட்டத்தில் பிராமணரல்லாத சாதியினர் அதிகளவில் உள்ளே வந்தனர். அச்சாதிகளில் பனியாக்கள் மிகமிக குறைவு, அனேகமாக இல்லை என்றே சொல்லவேண்டும். ஆனால் மற்ற பிராமணரல்லாத சாதிகளை பொதுவாக வைசிய அந்தஸ்துள்ள சாதிகள் என்று சொல்லலாம். வணிகம் செய்பவர்களல்ல என்றாலும் படிநிலையால் இவர்களை வைசியர்கள் என்றும் ஆகவே பனியா என்றும் சொன்னோமென்றால் காங்கிரஸின் எல்லா செயல்பாடுகளையும் பார்ப்பனர்கள் x பனியாக்கள் என்றே பிரிக்கவேண்டியிருக்கும்.

காங்கிரசுக்குள் பிராமணர்களுக்கும் இரண்டாம் நிலைச்சாதியினருக்கும் இடையேயான முரணியக்கம் எப்போதுமே வலுவாக இருந்துகொண்டிருந்தது. இரு தனிப்பிரிவுகளாக வெளிப்படையாக பிரிந்து இவர்கள் மோதிக்கொள்ளவில்லை என்றாலும் எங்கும் இந்த மோதல் உறைந்திருந்தது. இதனுடன் வேறு பல பிரிவினைகளும் போட்டிகளும் கலந்துகொண்டன.

இச்சூழலில்தான் காங்கிரசுக்குள் இஸ்லாமியரின் இடத்தைப்பற்றி பார்க்க வேண்டும். 1908 முதலே முஸ்லீம்களை காங்கிரஸில் இருந்தும் ஒட்டுமொத்தமாக பிற இந்திய சமூகத்தில் இருந்தும் பிரிப்பதில் பிரிட்டிஷ் ஆட்சி வெற்றி பெற்றிருந்தது. அவர்களுக்கு தனித்தேர்தல் முறை அளிக்கப்பட்டு அவர்கள் பொதுத்தேர்தலில் வாக்களிக்க அனுமதிக்கப்படவில்லை. அவர்களின் தலைமையை அவர்களே தேர்வுசெய்தார்கள். அதாவது இந்தியாவின் அரசியல் போராட்டத்தில் அவர்கள் எவ்வகையிலும் பங்களிக்க வைக்கப்படவில்லை.

அன்றைய தேர்தலில் அனைவருக்கும் வாக்குரிமை இல்லை. சொத்துரிமை கொண்டவர்களுக்கே வாக்கு. ஆகவே அன்றைய பிரிட்டிஷ் ஆட்சிக்குக் கீழே இருந்த முஸ்லீம்களில் பத்து சதவீதம் பேருக்குக் கூட ஓட்டுரிமை இல்லை. பிரிட்டிஷ் ஆட்சிக்குக் கீழே வராத சம்ஸ்தானங்களில் அந்த ஓட்டுரிமையும் இல்லை. ஆகவே அன்றைய அரசியலதிகாரம் என்பது இஸ்லாமிய உயர்குடியினர் பிரிட்டிஷ் ஆட்சியின் தயவுடன் பெற்றுக்கொள்ளக்கூடிய

ஒன்றாகவே இருந்தது. அன்றைய இஸ்லாமியத் தலைவர்களைப் பார்த்தால் அவர்கள் பிரிட்டிஷ் ஆட்சியுடன் ஒத்துச் செயல்பட்ட முஸ்லீம் மன்னர்கள் அல்லது பிரபுக்கள் என்பதைக் காணலாம்.

காந்தியின் காங்கிரஸ் இஸ்லாமிய எளிய மக்களை அரசியல்படுத்தி அவர்களை தன்னுள் கொண்டு வருவதை இந்த இஸ்லாமிய உயர்குடித்தலைமை அச்சத்துடன் கவனித்துக் கொண்டிருந்தது. கிலா·பத் இயக்கம்தான் இந்தியாவில் உருவான முதல் இஸ்லாமிய வெகுமக்கள் அரசியலியக்கம். அதில் இருந்த எளிய மக்களின் பங்களிப்பு காந்தியைக் கவர்ந்திருக்கலாம். அதன்மூலம் அம்மக்களை அரசியல்படுத்தவும் இந்து முஸ்லீம் ஒற்றுமையை உருவாக்கவும் முடியும் என்று அவர் எண்ணியிருக்கலாம். ஆகவே அவர் அதனுடன் காங்கிரஸ் ஒத்துச்செயல்படச்செய்தார்.

காந்தியின் நோக்கம் நிறைவேறியிருந்தால் லட்சக்கணக்கான முஸ்லீம்கள் காங்கிரஸுக்குள் வந்திருப்பார்கள். அங்கே ஏற்கனவே இருந்த அதிகார முரணியக்கத்தில் அவர்களும் ஒரு புதிய தரப்பாக ஆகியிருப்பார்கள். ஒட்டுமொத்த அதிகாரம் அந்த முரணியக்கத்தின் சமரசப்புள்ளியாக உருவாகி வந்திருக்கும். காங்கிரஸின் அதிகாரமையத்தில் ஒரு பகுதியாக அவர்கள் இருந்திருப்பார்கள். அதுவே ஜனநாயகத்தின் இயல்பான வழிமுறை.

அது நடக்கவில்லை. கிலா·பத் இயக்கம் இஸ்லாமிய மதத்தலைவர்களை அரசியலுக்குள் இழுத்துவந்தது. இஸ்லாமிய அரசியல் என்பது முல்லா அரசியலாக ஆகியது. எளிய முஸ்லீம்கள் புதிய அரசியல் அடையாளங்களை அடைவதற்குப் பதிலாக ஏற்கனவே இருந்த மத அடையாளத்தை எடுத்துக்கொண்டு பொதுவெளிக்கு வந்தார்கள்.

ஐயத்துடன் இந்த அடித்தள எழுச்சியை கவனித்துக்கொண்டிருந்த முஸ்லீம் மேல்தட்டு அரசியல்வாதிகள் சட்டென்று ஒரு அதிகார சூத்திரத்தைக் கண்டுகொண்டார்கள். அத்தனை எளிய மக்களையும் தங்கள் கீழ் ஆவேசமாக அணிவகுக்கச் செய்யும் மந்திரம். அதுவே இஸ்லாமிய தேசியம். கோட் சூட் அணிந்துகொண்டு, வறுத்த பன்றியுடன் ஸ்காட்ச் சாப்பிட்டு, மசூதிக்கு போவதை ஆங்கிலத்தில் பகடி பேசி வாழ்ந்தவர்கள் அந்த இஸ்லாமியத் தலைவர்கள். ஆனால் சட்டென்று அவர்கள் மதக்காவலர்களாக உருமாறினார்கள்.

கிலா·பத் இயக்கம் காங்கிரசுக்குள் ஏராளமான இஸ்லாமியர்களைக் கொண்டுவந்தது. கடைசிவரை காங்கிரஸின் இஸ்லாமிய பிரிவாக இருந்தவர்கள் பெரும்பாலும் அப்போது வந்தவர்களே. அவர்களை காங்கிரஸில் இருந்து அன்னியப்படுத்தவும் எளிய முஸ்லீம்களை காங்கிரஸை எதிரியாக எண்ணச்செய்யவும் ஒரு கோஷமாக உருவாக்கப்பட்டதே பார்ப்பன-பனியா தேசியம் என்ற கோஷம். திரும்பத்திரும்ப இந்த கோஷத்தைச் சொல்வதன் மூலம் தங்கள் தரப்பில் அதை ஒரு வலுவான நம்பிக்கையாக ஆக்கினார்கள்.

அந்த கோஷம் மூலம் காங்கிரசுக்குள் இருந்த ஒன்றுக்கொன்று முரண்பட்ட சக்திகளை எல்லாம் சேர்த்து ஒரே தரப்பாக மாற்றிவிட்டார்கள். இவ்வாறு ஒரு வலுவான ஒற்றை எதிரியைக் கட்டமைக்காமல் இஸ்லாமியரால் அரசியல் ரீதியாக ஒன்றுதிரள முடியாது. ஏனென்றால் காங்கிரஸுக்குள் இருந்ததை விட மிகப்பெரிய சமூகப்பிரிவினைகள், அரசியல் பிரிவினைகள், பொருளாதார ஏற்றதாழ்வுகள் முஸ்லீம்களிடம் இருந்தன. காங்கிரஸ் என்ற பார்ப்பன- பனியா இந்து சக்தி தங்களை விழுங்கிவிடும் என்ற அச்சத்தை மத அடையாளத்தை சுமந்த எளிய முஸ்லீம்களிடம் சொல்லி அவர்களை தங்கள்கீழ் திரட்ட முஸ்லீம் உயர்குடியினரால் முடிந்தது. அதுவே பாகிஸ்தான் பிரிவினைக்கு வழியமைத்தது.

காங்கிரசின் உள்முரண்பாடுகளை நாம் எளிமையாக வகுத்துக்கொள்ளவே முடியாது. ஏற்கனவே சொன்னது போல அது இந்திய உள்முரண்பாடுகளின் சரியான பிரதிநிதியாக இருந்தது. பிராமணர்- பிராமணர் அல்லாத வைசிய,சூத்திர சாதிகள் என்ற ஒரு முரணியக்கம் இருந்தது. வடக்கு- தெற்கு என்ற ஒரு முரணியக்கம் இருந்தது. இந்திபேசுவோர் -அல்லாதோர் என்ற ஒரு முரணியக்கமும் இருந்தது. காங்கிரசுக்குள் இருந்த எந்த ஒரு அரசியல் செயல்பாட்டையும் இந்த அனைத்துவகையான முரணியக்கங்களும் சிக்கலான வகையில் ஒன்றுடன் ஒன்று ஊடுருவுவதன் மூலம் நிகழ்வதாகவே எடுத்துக்கொள்ள முடியும்.

ஒரு பனியாவாக காந்தி காங்கிரசுக்குள் இருந்த பிராமணர்களின் எதிர்ப்பைச் சந்தித்துக்கொண்டே இருந்தார். அவரது உண்ணாவிரதங்கள் பல அவர்களுக்கு எதிரானவை. அதேசமயம் பிராமணரான நேருவை அவர் முன்னிறுத்தினார், அது அந்த பிராமண எதிர்ப்பை சமாளிக்கும் ஓர் உத்தி என்று சொல்பவர்கள் உண்டு. நேருவுக்கு எதிராக எழுந்த வைசியர்-சூத்திரர்

தலைவரான சுபாஷ் சந்திர போஸுக்கு எதிராக காந்தியுடன் நின்றவர் முக்கியமான வைசிய -சூத்திரதலைவரான வல்லபாய் படேல். அதாவது காங்கிரசையும் சரி அதன் உள்முரண்பாடுகளையும் சரி எளிமைப்படுத்தவே முடியாது.

ஜின்னா அந்த எளிமைப்படுத்தலைச் செய்து பாகிஸ்தானை அடைந்தார். ஆனால் அந்த எளிமைப்படுத்தப்பட்ட பொது எதிரி என்ற உத்தி அதற்குமேல் ஒரு தேச உருவாக்கத்துக்குக் கைகொடுக்கவில்லை. அங்கே அவரால் ஒரு தேசிய சமூகத்தை உருவாக்க முடியவில்லை. ஜின்னாவின் முஸ்லீம் லீக் ஒரு பொதுத்தேர்தலைக்கூட சந்திக்காத செயற்கையான அரசியல் இயக்கமாகவே இருந்தது, இருக்கிறது. ஆப்கானிய எல்லை மாகாண பூசல்கள், கிழக்கு பாகிஸ்தான் பிரிவினை, சிந்து கலவரங்கள், இப்போது ஸ்வாத் பள்ளத்தாக்குப் போர் என உள்நாட்டுப்போர் நடக்காத காலமே பாகிஸ்தானில் இருந்ததில்லை. இஸ்லாமியர்களில் இருந்த கோடானுகோடி அடித்தளமக்கள் இன்றும்கூட எவ்வகையிலான ஜனநாயகமயமாக்கலும் இல்லாமல் மேல்தட்டினரால் ஆளப்படுகிறார்கள்.

இன்றும்கூட பாகிஸ்தானில் செல்லுபடியாகக்கூடிய ஒரே அரசியல் இணைப்புசக்தியாக இருப்பது இந்திய எதிர்ப்பு என்ற எதிர்மறை மனநிலை மட்டுமே. அதாவது அதே பார்ப்பன -பனியா கோஷம் தான். ஆனால் அது இன்றைய நவீன உலகின் சிக்கல்களை எதிர்கொள்ள போதுமானதாக இல்லை. ஒவ்வொரு தரப்பும் தங்கள் அதிகாரத்தைக் கோருகின்றன அங்கே. வெறுப்பில் பிறந்த தேசம் அந்த வெறுப்புக்கான விலையை ஒவ்வொருநாளும் கொடுத்துக்கொண்டே இருக்கிறது.

பாகிஸ்தானியவாதிகளிடம் இருந்துதான் திராவிட இயக்கம் பார்ப்பன-பனியா கோரிக்கையைக் கடன் கொண்டது. திராவிட இயக்கத்தின் வேர்களை ஆராய்ந்தால் நாம் ஜஸ்டிஸ் கட்சிக்குச் சென்று சேர்வோம். பிரிட்டிஷ் ஆட்சியின் பதவிகளில் பங்குகோரி பிராமணர் அல்லாத உயர்சாதியினரால் உருவாக்கப்பட்ட இயக்கம் அது. இந்தியர்களுக்கு ஒருவகை போலியான பிராந்திய தன்னாட்சியை பிரிட்டிஷ் அரசு வழங்கியபோது அதை அடைவதற்காக அரசியல் கட்சியாக அது உருவாகியது. கிட்டத்தட்ட முஸ்லீம் தலைவர்களைப்போல அதுவும் பிரிட்டிஷாரை ஆதரித்த உயர்மட்ட பிரமுகர்களால் ஆனது.

கிட்டத்தட்ட முஸ்லீம் லீகின் பாணியிலேயே திராவிட இயக்கமும் நகர்வதைக் காணலாம். காங்கிரஸ் கோடிக்கணக்கான அடித்தள மக்களை அரசியல்படுத்தி தன்னுள் இழுத்துக்கொள்வதை அவர்கள் பார்க்கிறார்கள். காங்கிரஸில் இருந்து பிற்படுத்தப்பட்ட மக்களை பிரித்து தங்களுக்குக் கீழே நிறுத்திக்கொள்ள வேண்டும் என்ற ஆசையினால் காங்கிரஸை பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு எதிரான சக்தி என்று எளிமைப்படுத்த பார்ப்பன-பனியா என்ற கோஷத்தை அவர்களும் முழங்க ஆரம்பித்தார்கள்.

இன்றுவரை விவாதிக்கப்படாத பல கோணங்கள் இதில் உள்ளன. வடநாட்டில் பனியாக்கள் என்ன செய்தார்களோ, எந்த சமூக இடத்தில் இருந்தார்களோ, அந்த இடத்தில் இருந்தவர்களான முதலியார்கள், செட்டியார்கள், நாயர்கள், வேளாளர்கள் போன்றவர்களே திராவிட இயக்கத்தின் முன்னோடிச்சாதிகள். இவர்கள் தங்களை வைசியர்கள் என்று சொல்லிக் கொண்டவர்கள். இந்திய மக்கள்தொகை கணக்கெடுப்புகளில் அவ்வாறு தங்களை அடையாளப்படுத்திக்கொள்ள இயக்கம் நடத்தியவர்கள். தமிழக வேளாளார்களும் கேரளா நாயர்களும் பிரிட்டிஷ் கணக்கெடுப்புகளில் தங்களை வைசியர்கள் என்று சொல்லிக் கொள்வதைக் காணலாம். வெள்ளக்கால் சுப்ரமணிய முதலியார், மனோன்மணியம் சுந்தரனார் போன்றவர்கள் அந்த வைசிய அடையாள கோரலைப்பற்றி நிறைய எழுதியிருக்கிறார்கள். அதாவது 'வட இந்திய பனியா கெட்டவன், ஆகவே பிற்படுத்தப்பட்டவர்களே வந்து தென்னிந்திய பனியாக்களாகிய எங்களின் கீழ் அணிவகுத்து நில்லுங்கள்' என்ற கோஷம்தான் திராவிட இயக்கத்தின் தொடக்கம்.

முஸ்லீம்களுக்கு மதம் என்ற ஒற்றுமைப்படுத்தும் சக்தி இருந்தது. அதேபோல இனத்தை முன்னிறுத்த முடியுமா என்ற சோதனைதான் திராவிட இனவாதத்தின் எழுச்சிக்குக் காரணமாக அமைந்தது. ஏற்கனவே கால்டுவெல்லில் இருந்து எடுக்கப்பட்டு மனோன்மணியம் சுந்தரனார் போன்றவர்களால் ஒரு சிறிய வட்டத்துக்குள் பேசப்பட்ட கருத்து அது. ஒரு தேசிய உருவகமாக முன்வைப்பதற்கான ஆய்வடிப்படையோ தர்க்கபூர்வத்தன்மையோ அதற்கு இருக்கவில்லை. ஆனால் மதவாதம்போலவே இனவாதமும் எளிமையாக பேதங்களை உருவாக்கும் என்ற நம்பிக்கையுடன் அது தேசியக்கருத்தாக்கமாக உருவாக்கபட்டது.

உருவான சில வருடங்களுக்குள்ளாகவே அது நடைமுறையில் கைவிடப்பட்டது. இனவாதம் அப்படியே மொழிவாதமாக ஆக்கப்பட்டது.

திராவிட இயக்கத்தின் பிறவிக்கான காரணமாகச் சொல்லப்படுவது வகுப்புவாரி பிரதிநிதித்துவத்துக்கான ஈ.வே.ரா அவர்களின் கோரிக்கை காங்கிரசால் மறுக்கப்பட்டமையே. காங்கிரஸின் தேசிய நிலைபாடுகள் அக்காலத்தில் தெளிவாகவே இருந்திருக்கின்றன. உயர்மட்டத்துக்கு மட்டுமே வாக்குரிமை அளித்து தன் ஆதிக்கத்துக்குக் கீழே வெள்ளையர் நடத்திய தேர்தல்கள், மாகாண ஆட்சி எதையுமே காங்கிரஸ் ஏற்றுக்கொண்டதில்லை. மிண்டோ மார்லி சீர்திருத்தம், மண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தம், சைமன் கமிஷன் அனைத்தையும் காங்கிரஸ் நிராகரித்திருக்கிறது. பின்னர் ஏற்பட்ட ஒப்பந்தத்தின் பேரில் மிகமிகக் குறைவான காலம் மட்டுமே காங்கிரஸ் அவ்வாட்சியில் இருந்திருக்கிறது. காங்கிரஸ் கோரியது முழுமையான தன்னாட்சி, அனைவருக்குமான வாக்குரிமையின் அடிப்படையிலான ஜனநாயகம். அந்தப்போராட்டத்தை பிளவுபடுத்தும் கோரிக்கையாகவே அது வகுப்புவாரி பிரதிநிதித்துவத்தை பார்த்தது.

உண்மையில் வகுப்புவாரி பிரதிநிதித்துவத்தை காங்கிரசின் போராட்ட வல்லமையை பிளக்கும் முயற்சியாக பிரிட்டிஷார்தான் கொண்டுவந்தார்கள். அவர்களின் அடிவருடிகளால்தான் அது பேசப்பட்டது. வகுப்புவாரி பிரதிநிதித்துவம் வந்திருந்தால்கூடநில உரிமையில்லாதவர்களும் வரிகட்டாதவர்களுமான அன்றைய பிற்படுத்தப்பட்டோரில் பத்து சதவீதம்பேர்கூட வாக்களிக்க முடிந்திருக்காது என்பதும், அதன் பயன்களைப்பெற்று தமிழக வைசியர்களின் உயர்குடிகளில் சிலர் பிரிட்டிஷ் ஆதிக்கத்துக்குக் கீழே மாகாண சபைகளில் சென்று அமர்ந்திருப்பார்கள் என்பதும்தான் உண்மை. அப்படியானால் ஈ.வே.ரா கோரிய அந்த வகுப்புவாரிக்கோரிக்கை யாருடைய நலனுக்காக?

பிற்படுத்தப்பட்டோருக்கு உண்மையான ஆட்சியதிகாரம் என்பது இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடைத்தபின்பு அரசியல் நிர்ணயசபை கூடி உருவாக்கிய அரசியல் சட்டத்தில் வயதுவந்த அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கப்பட்டபோதுதான் சாத்தியமாகியது. அதைச் செய்தது காங்கிரஸ். இன்று இந்தியா முழுக்க வலுவாக உருவாகியிருக்கும் பிற்படுத்தப்பட்டோர் அதிகாரம் என்பது எந்த வகுப்புவாரி பிரதிநிதித்துவம் வழியாகவும் உருவானதல்ல, வயதுவந்தோர் வாக்குரிமை மூலம் மட்டுமே உருவானது.

தமிழகத்து பனியாக்களின் கையில் இருந்து அதிகாரம் தமிழகத்து பிற்படுத்தப்பட்டோர் கைகளுக்குச் சென்றதும் காங்கிரஸ் அளித்த வயதுவந்தோர் வாக்குரிமை வழியாகவே.

இந்தியாவின் மக்கள்தொகையின் பெரும்பகுதி பிற்படுத்தப்பட்டவர்கள் என்றும், வயதுவந்தோர் வாக்குரிமை அவர்களுக்கே அதிகாரத்தை அளிக்கும் என்றும் தெரிந்துதான் 'பார்ப்பன-பனியா' காங்கிரஸ் அச்சட்டத்தைக் கொண்டுவந்தது. 1953ல் லக்னோவில் பேசிய நேரு அதை திட்டவட்டமாகவே சொல்கிறார், இந்தியச் சுதந்திரப்போரை வழிநடத்தியது உயர்சாதியினராக இருந்தாலும் வரும்காலத்தில் அதிகாரம் பிற்படுத்தப்பட்டோர் கைக்குச் செல்லும் என்றும் அதுவே எண்ணிக்கையடிப்படையிலான ஜனநாயகம் என்றும் அவர் சொன்னார்.

தமிழகத்தில் ஈவேரா அவர்கள் செய்தது போல பிற்படுத்தப்பட்டோர் உரிமைக்காக பிரிட்டிஷ்காரர்களை ஆதரிக்கும் இயக்கம் எதுவும் பிற இந்திய மாநிலங்களில் நிகழவில்லை. அங்கே காங்கிரஸ் உருவாக்கிய அனைவருக்கும் வாக்குரிமையளிக்கும் ஜனநாயகம் மூலமே பிற்படுத்தப்பட்டோருக்கான அதிகாரம் கைவந்தது. ஆகவே தமிழகத்துப் பிற்படுத்தப்பட்டோருக்கு ஈவேரா அரசியலதிகாரம் பெற்றுத்தந்தார் என்பதெல்லாம் வெறும் வரலாற்றுப்பிரமைகள் மட்டுமே.

ஒருபேச்சுக்காக இந்தியா முழுக்க ஈவேராக்கள் கிளம்பி பிரிட்டிஷ்காரர்களை ஆதரித்திருந்தால் இந்தியாவுக்கு தன்னரசும் வந்திருக்காது வயதுவந்தோர் வாக்குரிமையும் வந்திருக்காது பிற்படுத்தப்பட்டோர் அதிகாரமும் சாத்தியமாகியிருக்காது. ஈவேராவால் பிற்படுத்தப்பட்டோருக்கு அதிகாரம் கிடைக்கவில்லை, அவரைமீறி கிடைத்தது என்றே சொல்லவேண்டும். காங்கிரஸ் பார்ப்பன பனியா அரசியலை நடத்தியது என்ற வாதத்தை முன்வைப்பவர்கள் அந்த 'பார்ப்பன-பனியா தேசியம்' மூலம் தமிழகத்தில் அதிகாரத்துக்கு வந்தவர்தான் காமராஜ் என்பதை மறந்துவிடுகிறார்கள். அவர் ஜஸ்டிஸ் கட்சியாக இருந்து தமிழக அதிகாரத்தை கையாண்ட 'தமிழக பனியா'க்களை வெளியே தள்ளித்தான் அந்த அதிகாரத்தை அடைந்தார்.

பார்ப்பன-பனியா தேசியத்தையே காந்தி உருவாக்கினார் என்பது சொல்லப்பட்ட ஒரு திரிபுவாதப் பிரச்சாரம். அது தமிழகத்து பனியாக்கள் தங்கள் அரசியலதிகாரத்துக்காக பிற்படுத்தப்பட்டோரை

காங்கிரஸில் இருந்து பிரிப்பதற்காக முஸ்லீம்லீகிடம் இருந்து எடுத்தாண்ட ஓர் எளிமைவாதம் அல்லது அவதூறு மட்டுமே.

## தரகு முதலாளித்துவ தேசியமா?

ஐம்பதுகளில் பி.டி. ரணதிவே உருவாக்கிய சொல்லாட்சி இது. இந்திய தேசியம் உண்மையானதல்ல என்றும், இது இந்தியாவில் இருந்த முதலாளிகளின் நலனுக்காக உருவாக்கப்பட்டது என்றும் அவர் சொன்னார். காங்கிரஸ்காரர்கள் பிரிட்டிஷார் இருந்தபோது அவர்களுடன் ஒத்துழைத்து முதலாளிகளுக்கு தரகுவேலைசெய்து பொருளியல் அதிகாரத்தை அடைந்தவர்கள் என்றும், சுதந்திரம் முதலாளிகளுக்கே வாங்கிக்கொடுக்கப்பட்டது என்றும் அவர் வாதிட்டார்.

அதன்பின் இச்சொல்லாட்சியை இடதுசாரிகள் அனைவருமே மாறி மாறிப் பயன்படுத்துகிறார்கள். இந்திய தேசியத்தை தங்கள் கோட்பாட்டு நோக்கில் வரையறை செய்துகொண்டு அதை தங்களுக்கு உகந்த முறையில் மாற்றியமைக்கும்படியான போராட்டங்களில் ஈடுபடுவதற்கு இந்திய இடதுசாரிகளுக்கு அனைத்து உரிமையும் உண்டு. ஆனால் அவர்கள் முன்வைக்கும் சித்திரம் அவர்களின் பிரச்சாரத்தரப்பு அன்றி வரலாறு அல்ல.

இவர்களால் சொல்லப்பட்ட முக்கியமான குற்றச்சாட்டு என்னவென்றால் காந்தி இந்தியாவின் பெருமுதலாளிகளுடன் நெருக்கமாக இருந்தார், அவர்களிடம் நிதி பெற்றுக்கொண்டார், அவர்கள் வீட்டில் தங்கினார், ஆகவே அவர் இந்தியப் பெருமுதலாளிகளின் ஆள், அவர் பெற்றுத்தந்த தேசியம் என்பது அவர்களின் நலனுக்கானதே என்பதுதான். இவர்களில் ஒருசாரார் அதை மேலும் உச்சபடுத்தி காந்தியை அரசியலுக்குக் கொண்டுவந்ததே அவர்கள்தான் என்கிறார்கள்.

இங்கே சொல்ல வேண்டிய விஷயம் என்னவென்றால் காந்தி தன்னை புரட்சிக்காரர் என்று சொல்லிக்கொண்டவரல்ல என்பதே. அவருக்கு மார்க்சியம் ஏற்புடையதாகவும் இருக்கவில்லை. அவர் எதையுமே ரகசியமாகச் செய்யவும் இல்லை. ஆகவே அவரது திட்டங்கள் மட்டும் ரகசியமானவை என்று சொல்வதைப்போல அபத்தம் எதுவும் இல்லை. அவரது பொருளியல் திட்டங்கள் அவராலேயே விரிவாகவே

எழுதப்பட்டிருக்கின்றன. அவற்றை ஒட்டியே அவர் அனைத்தையும் முற்றிலும் வெளிப்படையாகச் செய்தார். அவர் என்ன எண்ணினார் என்ன செய்தார் என்பதை அவரது எழுத்துக்களையும் செயலையும் ஒட்டி முடிவுசெய்வதே முறை.

காந்தியின் சமூகப்பொருளியல் சித்தாந்தம் அவருக்குப்பின் ஜெ.சி.குமரப்பா போன்றோராலும் விரிவாக விளக்கப்பட்டிருக்கிறது. காந்தி தனியுடைமைக்கு முற்றாக எதிரானவர் அல்ல. தனியுடைமை பேராசையாக ஆகக்கூடாது என்று சொன்னவர் மட்டுமே. அவர் என்றுமே முதலாளிகளுக்கு எதிராக தொழிலாளர்கள் கிளர்ந்தெழவேண்டும் என்றும் முதலாளிவர்க்கத்தையே தொழிலாளர் அழிக்க வேண்டும் என்றும் சொன்னவரல்ல. மாறாக அந்த பிரிவினையை, அதில் உறைந்துள்ள வன்முறையை ஓர் அழிவுச்சக்தியாக மட்டுமே கண்டவர்.

காந்திக்கு 'தேசிய முதலாளிகள்' மீது நம்பிக்கை இருந்தது. இந்தியாவின் பொருளியல் வளர்ச்சிக்கு அவர்களால் பெரும்பங்களிப்பாற்ற முடியும் என்று அவர் நம்பினார். மக்களை ஒருங்கிணைக்கவும் அமைப்புகளை உருவாக்கி நிர்வாகம்செய்யவும் திறனுள்ள தேசிய முதலாளிகள் ஏராளமாக உருவாகி வரவேண்டும் என்று அவர் சொன்னார். அவர்கள் தொழில்நுட்பம் சார்ந்து இயங்காமல் மனிதர்களைச் சார்ந்து இயங்கவேண்டும் என்றும், அவர்களின் உபரிச் செல்வத்தை மேலும் முதலீடுகளாகவும் அறச்செயல்பாடுகளாகவும் மட்டுமே அவர்கள் ஆக்கவேண்டும் என்றும் சொன்னார்.

காந்தி முதலாளிகளுக்குச் சொன்ன வழிகாட்டல் தர்மகர்த்தா முறை எனப்படுகிறது. தங்கள் சொத்துக்களுக்கு முதலாளிகள் அறங்காவலர்களாக மட்டுமே இருக்கவேண்டும் என்றும், அந்தச் சொத்துக்களை அவர்கள் சுயலாபத்துக்காகச் வழிகளில் செலவிடலாகாது என்றும் சொன்னார். இது அப்படியே புராதன சமண சமயம் அதன் வணிகர்களுக்குச் சொன்ன அறிவுரைதான்.

முதலாளிகள் என்றாலே சமூகத்தின் தீய சக்திகள் என்ற எண்ணம் கொண்டவர்கள் தங்கள் பாணியில் போகட்டும். பிறர் காந்தி சொன்னவற்றின் நடைமுறைத்தன்மையையும் இன்றும் நீடிக்கும் அதன் பொருத்தப்பாடையும் குறித்து சிந்திக்கலாம். அவை அனைத்தும் சரி என்றும் , காந்தி காட்டிய பொன்வழி என்றும் சொல்லவரவில்லை. அது அவர் அன்றைய சூழலில் முன்வைத்த ஒரு கருத்துநிலை. அதற்கு அவர்

உண்மையாக வெளிப்படையாக இருந்தார். அதுவே சிந்தனைக்கும் பரிசீலனைக்கும் உரியது.

முதலில் பேசவேண்டியது, இன்று இடதுசாரிகளின் ஒரே முன்னுதாரண தேசமான சீனா தேசியமுதலாளிகள் என்ற கோட்பாட்டை தன்னுடைய அதிகாரபூர்வ கொள்கையாகவே அறிவித்துச் செயல்பட்டு வருகிறது என்பதே.மாவோவின் இடதுசாரிப்புரட்சிக்குப்பின்னர் முதலாளிகளை கொன்றே ஒழித்து, அதன்பின்னர் சிறுவணிகர்களை முழுக்கக் கொன்றொழித்து, அதன் பின் நில உடமையாளர்களைக் கொன்றொழித்து, அவ்வாறாக இன்றைய சீன அரசின் கணக்குப்படியே கிட்டத்தட்ட ஒருகோடி மானுட உயிர்களை பலிகொடுத்து சீனா அதன் பொதுவுடைமை அமைப்பை உருவாக்கிக் கொண்டது.

அது உழைப்பாளர்களும், ட்பாட்டாளர்களும் ,ஆட்சியாளர்களும் மட்டுமே அடங்கிய சமூகம். அதாவது எந்தச் சமூகத்தை உருவாக்குவதற்காக கம்யூனிஸ்டுகள் ருஷ்ய ஆதரவுடன் 1948லும், சீன ஆதரவுடன் நக்சலைட்டுகள் 1962லும் முயன்றார்களோ அதே சமூகம். எந்த சமூகத்தை உருவாக்கும் எண்ணத்துடன் காந்தியை தரகுமுதலாளிகளின் கையாள் என்றார்களோ அதே சமூகம். அந்தச் சமூகம் வெறும் முப்பது வருடங்களில் அரசியல் பொருளியல் தளங்களில் பரிதாபகரமான தோல்வியைத் தழுவியது.மேற்கொண்டு ஒரு அடிகூட முன்வைக்க முடியாத நிலை உருவானது.

அதன் விளைவாக டெங் ஸியாவோ பிங் காந்தி சொன்ன அதே தேசியமுதலாளிகள் என்ற கருத்தை முன்வைத்தார். தனியார் தொழில் தொடங்க ஊக்குவிக்கப்பட்டார்கள். அவர்களுக்கு அன்னிய முதலீடுகள் பெற்றுத்தரப்பட்டன. சீனாவில் கம்யூனிசப்படுகொலை அரசு இருந்தபோதே தேசிய முதலாளிகள் இருந்தார்கள், அவர்கள் பிராந்தியக் கம்யூனிச தலைமையின் ஆதரவுடன் மிக ரகசியமாகச் செயல்பட்டார்கள் என்பது அப்போது வெளிப்பட்டது. ஏனென்றால் அவர்கள் இல்லாமல் அந்த பொருளியலமைப்பே செயல்பட முடியாது. அவர்கள் எல்லாம் இன்று மீண்டும் பெருமுதலாளிகள் ஆகிவிட்டார்கள். சீனா அவர்களைச்சார்ந்தே இன்று இயங்கி வருகிறது. பல சீன முதலாளிகள் டாட்டாக்களை விட அம்பானிகளை விட செல்வந்தர்கள்.

இதையொட்டி இன்றைய கேரள, வங்க கம்யூனிஸ்டுகள் தங்கள் ஆட்சிக்குள்ளும் தங்களுக்குச் சாதகமான தேசிய முதலாளிகளை உருவாக்க முயன்றுகொண்டிருக்கிறார்கள். முதலீடுகளுக்காக அழைப்பு விடுக்கிறார்கள். கட்சிக்கு பெரும் நிதியை அவர்களிடம் இருந்து பெற்றுக்கொள்கிறார்கள். முதலாளிகளைக் கொன்று சாப்பிடுவது என்ற கருத்தெல்லாம் டைனோஸர் போல கல்படிவங்களாக மாறி காலங்கள் தாண்டிவிட்டன. ஆனால் இன்றும் சீன ஆதரவு கம்யூனிசம் பேசும் கும்பல்கள் காந்தியை தரகு முதலாளித்துவ ஆதரவாளர் என்கிறார்கள். சீனாவைச் சுட்டிக்காட்டினால் சீன முதலாளிகள் சீனக் கம்யூனிச அரசுக்கு விசுவாசமானவர்கள் என்கிறார்கள். இது என்ன தர்க்கம் என்றே புரியவில்லை.

காந்தி பேசிய தர்மகர்த்தா முறை பழமைமவாத கம்யூனிச கோட்பாட்டுப்பித்து மனநிலையில் அபத்தமானதாகவே தோன்றும். ஆனால் செல்வம் என்பது ஓர் அளவுக்குமேல் அறக்கொடையாக மாறியே ஆகவேண்டும். முதலில் அது போகங்களாக இருக்கும். பின்னர் அதிகாரமாக ஆகும். அதன் பின்னர் அதற்கு பயனே இல்லை. ஆனால் அது சுழன்றாகவேண்டும். ஆகவேதான் ராக்பெல்லராக இருந்தாலும் சரி, வாரன் பப்பெட்டாக இருந்தாலும் சரி, டாட்டாவாக இருந்தாலும் சரி, அவர்கள் அறச்செயல்களுக்கு வருகிறார்கள். காந்தி அந்த மனநிலையை அவர்களின் நலனுக்காகவும் சேர்த்துத்தான் முன்வைக்கிறார்.

முதலாளிகள் தவிர்க்க முடியாதவர்கள் என்றால், அவர்களுக்கு தர்மகர்த்தா கோட்பாடு தவிர வேறு என்ன வழிமுறையை ஓர் நலம்நாடும் அரசு சொல்லமுடியும்? வேறு சாத்தியங்கள் என்ன? காந்தி சொன்னது அதைத்தான் என்பது ஒரு மாபெரும் நடைமுறை விவேகம் மட்டுமே. காந்தி அவர் நம்பிய தேசிய முதலாளிகளுடன் ஓயாத விவாதத்தில் இருந்தார். அவர்களை தன் அறச்சார்பால் தன்பக்கம் இழுக்க முயன்றார். உருவாகிவரும் இந்திய தேசியத்தின் ஆக்கபூர்வமான பங்களிப்பாளர்களாக அவர்களை ஆக்க முனைந்தார்.

இந்திய சுதந்திரப்போரில் காங்கிரஸ் பேரியக்கத்துக்குத் தேவையான நிதியை காந்தி இந்திய தேசிய முதலாளிகளிடம் இருந்தே பெற்றுக்கொண்டார். தேவைக்காக மட்டும். வெளிப்படையாக. அவற்றுக்கு பைசா பாக்கியில்லாமல் கணக்கு வைத்திருந்தார். அது ஒன்றும் லஞ்சம்

அல்ல. அவர்கள் அனைவரையும் லாபவெறி மட்டுமே கொண்ட மிருகங்கள் என உருவகித்துக்கொள்ளும் வெறுப்புவாத மார்க்ஸியமே அப்படிச் சொல்ல முடியும். காந்திக்கு நிதியளித்தவர்களில் பெரும்பாலானவர்களுக்கு காந்தி மீது மதிப்பிருந்தது. பலர் சொந்த வாழ்வில் காந்திய விழுமியங்களை கடைப்பிடித்தவர்கள்.

இன்று சிலர் சொல்வதற்கு மாறாக அவர்களில் பனியாக்கள் ஒருசிலரே. பெரும்பாலானவர்கள் சிந்திகள், மார்வாரிகள், பார்ஸிகள். இந்தியாவின் நிலப்பிரபுக்கள், மன்னர்கள் போன்றவர்களுடன் ஒப்பிடும்போது அந்த தேசியமுதலாளிகள் முற்போக்கானவர்கள். இந்தியப்பொருளாதாரத்தின் எழுச்சிக்கான அடித்தளத்தை அமைத்தவர்கள் இந்த தேசியமுதலாளிகளே.

அவர்கள் தங்கள் நலனுக்காக காந்திக்கு நிதியளித்தார்கள் என்பதை அக்காலச்சூழலை வைத்துப் பார்க்கும் எவருக்குமே அபத்தம் என்று புரிந்துகொள்ள முடியும். அவர்களின் வணிக நலன்களுக்கு பிரிட்டிஷ் அரசு என்ற முதலாளித்துவ அமைப்பு அல்லது சம்ஸ்தான மன்னர்கள் என்ற நிலப்பிரபுத்துவ அமைப்புதான் வசதியானது. நேரு பேசிக்கொண்டிருந்த சோஷலிசம் அவர்களுக்கு மிக மிக அபாயகரமானது. பஞ்சங்கள் நடந்து வறுமை ஓங்கியிருந்த இந்தியாவில் நேரு உறுதியளித்த வயதுவந்தோர் வாக்குரிமை சார்ந்த ஜனநாயகம் என்பது முதலாளிகளுக்கு முற்றிலும் நம்பமுடியாத ஒன்று. அதைவிட காந்தி பிடிவாதமாக சொல்லிக்கொண்டிருந்த கிராம சுயராஜ்யம் என்பது அவர்களுக்கு தற்கொலைக்கு நிகரானது.

ஆனால் அதையும் மீறி அவர்களின் தேசப்பற்றினாலேயே அவர்கள் காங்கிரசுக்கு நிதியளித்தனர். ஜாம்ஷெட்ஜி நவ்ரோஜி டாட்டா, பிர்லா, ஜம்னாலால் பஜாஜ் போன்றவர்களின் வரலாற்றை எடுத்துப்பார்த்தால் அவர்களின் வணிக ஆர்வத்தையும் தாண்டி அவர்களிடம் அழுத்தமான ஒரு தேசப்பற்று விளங்கியதைக் காண முடிகிறது. அவர்கள் தங்கள் நோக்கில் தேசத்தின் முன்னேற்றத்தை இலக்காக்கினார்கள் என்றும் தெரிகிறது.

மிகக் கறாரான தொனியிலும் பெரும்பாலும் எதிர்மறை மனநிலையிலும் எழுதப்பட்ட கிசிகிசு நூலான எம்.ஓ.மத்தாயின் நேருயுக நினைவுகள் [Reminiscences of the Nehru Age M.O.Mathay] நூலில் ஜி.டி.பிர்லாவைப் பற்றி வரும் இடம் இங்கே குறிப்பிடத்தக்கது. காங்கிரஸ் ஆட்சியில் இருக்கும்போது

பிர்லா நேருவை பார்க்க வருகிறார். நேருவுடன் அப்போது அவருக்கு நல்ல அறிமுகம் இல்லை. ஆகவே அவர் மத்தாயை வந்து சந்திக்கிறார்.

என்ன சிக்கல் என்றால் ஜி.டி.தேஷ்முக் தலைமையிலான நிதியமைச்சகம் பிர்லா கடந்த முப்பதுவருடங்களில் பிர்லாவின் வணிக அமைப்புகள் அளித்த நன்கொடைகளுக்கு வரி போட்டிருந்தது. அவற்றில் பெரும்பகுதி சுதந்திரப்போராட்ட காலகட்டத்துக் காங்கிரஸுக்கு அளிக்கப்பட்ட நிதி. அதை எடுத்து சொன்னாலும் அதிகாரிகள் புரிந்துகொள்ள மறுத்தார்கள். அதிகாரிகள் அனைவருமே பிரிட்டிஷ் காலத்து ஐ.ஸி.எஸ் காரர்கள். தேஷ்முக்கேகூட முன்னாள் ஐஸிஎஸ்தான். அவருக்கும் சுதந்திரப்போராட்டத்துக்கும் சம்பந்தமில்லை.

மத்தாய் விஷயத்தை நேருவுக்குக் கொண்டுசெல்வது நல்லதல்ல என்கிறார். ஏனென்றால் நேருவுக்கும் காங்கிரஸின் நிதியாதாரங்களுக்கும் எந்தவிதமான தொடர்பும் இருக்கவில்லை. பிர்லா காங்கிரஸுக்கு நிதியளித்தது நேருவுக்கு புதிய செய்தியாகவே இருக்கும். ஆகவே அபுல்கலாம் ஆஸாத்தை தொடர்புகொள்ளும்படிச் சொல்கிறார். ஆஸாதை தொடர்புகொண்டு நிகழ்ந்ததை எடுத்துச் சொல்கிறார் பிர்லா. ஆசாத் அதை நேருவுக்குச் சொல்கிறார். நேரு ஆசாத் சொன்னதனால் அதை நம்புகிறார்.

ஆனால் நேரு சொல்லியும் அதைத் தேஷ்முக் ஏற்றுக்கொள்ளவில்லை. டாட்டா காங்கிரஸுக்கு அளித்த நிதியுதவிக்கும் வரிகட்டியாகவேண்டும் என்கிறார். அக்காலத்தைய ஜனநாயக மரபின்படி ஓர் அமைச்சகத்தில் இன்னொரு அமைச்சகம் தலையிட முடியாது, பிரதமர்கூட! ஆகவே நேரு அவரே தேஷ்முக்கை சென்று கண்டு விஷயங்களை விளக்குகிறார். பிர்லா அந்த பெரும் நன்கொடைகளை அளித்த காலகட்டத்தில் காங்கிரஸுக்கு நன்கொடை அளிப்பது தற்கொலைக்கு நிகரானதாக கருதப்பட்டது, அந்த நன்கொடைகளுக்கு பிரதிபலனாக எதையுமே பிர்லா அப்போதும் இப்போதும் எதிர்பார்க்கவும் இல்லை என்கிறார். மெல்ல தேஷ்முக் சம்மதிக்கிறார்.

அப்போது பிர்லா மத்தாயிடம் பேசும்போது காந்தியின் தர்ம கர்த்தா கோட்பாடு எப்படி தன்னை கவர்ந்தது என்றும் ஆகவே தன் சொத்துக்களில் பெரும்பகுதியை கல்விசார்ந்த அறநிலைகளாக மாற்றிக்கொண்டிருப்பதையும் பற்றிச் சொல்கிறார். காந்திமேல் பெரிய மரியாதை ஏதும் இல்லாத மத்தாய் அதை ஆச்சரியத்துடன் பதிவுசெய்கிறார்.

நாட்டுக்குக் கிடைத்த சுதந்திரமே பிர்லா டாட்டாவின் காலடிகளில் கொண்டுசென்று சமர்ப்பிக்கப்பட்டது என்று நமக்கு இடதுசாரிகளால் சொல்லப்பட்டிருக்கிறது. அதைச் சொன்னவர்கள் இன்று அதே டாட்டாக்களையும் பிர்லாக்களாயும் தங்கள் ஆட்சிசெய்யும் மாநிலங்களுக்கு வந்து முதலீடு செய்து உதவும்படி கோரிக்கொண்டிருக்கிறார்கள் என்ற உண்மையுடன் இணைத்தே நாம் அதை சிந்திக்க வேண்டும்.

எந்த ஓர் அரசியலியக்கமும் அதைச்சார்ந்த முதலாளிகளின் பங்குடனேயே வேரூன்றியிருக்கிறது. தேசிய முதலாளிகளின் பண்பாட்டு, அரசியல் பங்களிப்பை தவிர்த்து ஒரு வரலாற்றை எவருமே எழுதிவிட முடியாது. அண்ணாமலைச் செட்டியார், அழகப்பா செட்டியார், பச்சையப்ப முதலியார் போன்றவர்களின் பங்களிப்பை எழுதாமல் இருபதாம் நூற்றாண்டின் தமிழர் வரலாற்றை எவர் எழுத முடியும்? அவர்களின் நிதி பெறாத பண்பாட்டு, அரசியல் இயக்கம் என ஏதேனும் தமிழ்நாட்டில் உண்டா என்ன? அவர்களை இயக்கியது காந்தி சொன்ன அதே தர்மகர்த்தா கோட்பாடுதான்.

ஏன் கேரளத்திலேயே முக்கியமான ஈழவத் தொழில்முனைவோரின் நிதியுதவியுடன்தான் கம்யூனிஸ்டுக் கட்சி வேரூன்றியது. அவர்கள் தங்கள் நலனுக்காக அவற்றை ஆதரித்தார்கள் என்றோ அல்லது அவ்வியக்கங்கள் அவர்களின் நலனுக்காக அவர்களால் உருவாக்கப்பட்ட டம்மி இயக்கங்கள் என்று சொல்லிவிட முடியுமா என்ன?

நேரு உருவாக்கிய சோஷலிச- அரசுமைய பொருளியல் அமைப்பு இந்தியாவின் தேசிய முதலாளிகளுக்கு முற்றிலும் எதிர்மறையானது என்பதை பொருளாதார அறிமுகம் உடைய எவருமே உணரலாம். அவரது லைசன்ஸ் ராஜை மீறியே அவர்கள் வளர்ந்தார்கள், பல அழியவும் நேரிட்டது, சிறந்த உதாரணம் நுஸ்லி வாடியா. நேரு பாணி கலப்புப்பொருளாதாரம் கைவிடப்பட்டு தாராளவாதப் பொருளாதாரம் நரசிம்மராவ் காலகட்டத்தில் புகுத்தப்பட்டதுமே இந்தியாவில் இருந்த தேசிய முதலாளிகள் பெரும்பாலும் அனைவருமே அசுரவளர்ச்சி கண்டார்கள் என்பதும் வரலாறே.

காந்தி நடத்திய சுதந்திரப்போராட்டம் மூலம் இந்தியாவுக்கு கிடைத்தது நேருவின் ஆட்சி. நேருவின் மூலம் இந்தியாவுக்குக் கிடைத்தது ஜனநாயகப்பண்புள்ள தாராளவாத அரசியல். மையப்படுத்தப்பட்ட நிர்வாக முறை. கட்டுப்படுத்தப்பட்ட தொழில்துறை மற்றும் அரசு திட்டமிடல் கொண்ட பொருளாதாரம். அதில் இந்திய பெரும் லாபங்களை

அடைந்திருக்கிறது. இன்றும் இந்தியாவின் பொருளாதார முதுகெலும்பாக இருக்கும் பொதுத்துறை அரசுசார் மையப்பொருளாதாரத்தால் உருவானதே. இந்திய வேளாண்மையை மேம்படுத்தி உணவுப்பஞ்சத்தைத் தீர்த்த அணைக்கட்டுகள் அவ்வாறு உருவானவையே. இந்தியாவின் பொதுச்சேவைத்துறைகள் அவ்வாறு வேரூன்றியவையே. மையத்திட்டமும் அரசு முதலீடும் இல்லையேல் பஞ்சத்தால் காலியான பொருளாதாரம் கொண்ட சுதந்திர இந்தியா அதன் தொழில்துறைக்கான அடிப்படைக் கட்டுமானங்களை உருவாக்கியிருக்க முடியாது.

அதேசமயம் அவற்றுக்கான இழப்புகளும் உள்ளன. திட்டமிடல் அடித்தளம் வரைக்கும் செல்லவில்லை என்பது முதல்சிக்கல். முதலீட்டைவிட வழிநடத்தலை விட நிர்வாகம் அதிக அதிகாரம் கொண்டதாக ஆகியது. அதன் மூலம் ஊழல் பெருகியது. தொழில்மயமாக்கல் மூலம் சூழலழிகள் பெருகின. இவ்வாறு பலவற்றைச் சுட்டலாம். ஆனால் நேரு அளித்தது ஒரு அவர் கனவுகண்ட தேசிய கட்டுமானம், அதை மக்கள் தங்கள் விருப்பப்படி மாற்றுவதற்கான ஜனநாயக அடித்தளம். அந்த அடித்தளத்தின் மீது வசதியாக நின்றபடித்தான் அதை இழிவுசெய்கிறார்கள் இடதுசாரிகள்.

### பண்பாட்டு மறுப்புத் தேசியமா?

சுதந்திரப்போராட்டம் நடந்துகொண்டிருந்த காலத்திலேயே இந்துமகாசபையும் அதன்பின்னர் ராஷ்டிரீய சுயம்சேவக் சங்கமும் காந்தி முன்வைத்த தேசிய உருவகம் மீது வைத்த முக்கியமான குற்றச்சாட்டு அது இந்தியப் பண்பாட்டை முழுமையாக விலக்கி மேலைநாட்டு தாராளவாத தேசியத்தை நகல் செய்து உருவாக்கப்பட்ட ஒரு தேசியம் என்பதுதான். இந்தியப்பண்பாட்டுத்தேசியம் என்பது இந்துப்பண்பாடு என்றும் அப்பண்பாட்டை முஸ்லீம்களை மகிழ்விப்பதற்காக காந்தியும் நேருவும் தங்கள் தேசகற்பிதத்தில் இருந்து அகற்றினார்கள் என்றும் குற்றம்சாட்டப்பட்டது. தேசப்பிரிவினையின் உணர்ச்சிக்கொந்தளிப்பான நாட்களில் இந்தக் குற்றச்சாட்டு பல லட்சம்பேரை காந்திக்கு எதிரான மனநிலைக்குத் திருப்பியது. அவர் கொலையுறவும் காரணமாக அமைந்தது.

அதன்பின்னர் கிட்டத்தட்ட ஐம்பதாண்டுக்காலம் இந்தக்குற்றச்சாட்டு மீண்டும் மீண்டும் முன்வைக்கப்பட்டு வந்தது. காந்தி உருவாக்கியது

இந்தியப்பண்பாட்டை மறுக்கும் போலித்தேசியம் என்று நம்பும் இந்துத்துவ இயக்கத்தினர் 'விறுவிறுப்பான' 'உண்மையான' 'செயலூக்கம் கொண்ட' தேசியத்துக்கான ஒரு போராட்டமே தாங்கள் நடத்துவது என்கிறார்கள். இந்த நோக்கை கீழ்த்தளத்தில் வெறும் பூசல்தன்மையுடன் முன்வைக்கும் நூலே ராதா ராஜன் எழுதியது.

இந்திய தேசியத்தின் வேர்கள் இந்தியாவின் பண்பாட்டுப் பாரம்பரியத்தில் உள்ளன என்பது உண்மை. ஆனால் அது இவர்கள் கூறும் இந்து தேசியம் என்பது ஏற்கனவே சொல்வதுபோல ஐந்து புனிதப்பிரமைகளின் விளைவாக உருவானதே. இந்தியாவின் பண்பாட்டுப் பாரம்பரியம் என்பது சமண, பௌத்த மதங்களின் பெரும்பங்களிப்பு கொண்டதே. அனைத்தையும் தழுவிக்கொள்ளும் இணைப்புத்தன்மையே அதன் சாராம்சமான குணம். காந்தியின் பண்பாட்டு மூலம் என்பது சமணமும் பௌத்தமும் உருவாக்கிய அந்த இணைக்கும் தன்மை, சமரசத்தன்மைதான்.

மேலும் ஒரு தேசிய உருவகத்தின் காரணம் இறந்தகாலத்தில் இருக்கலாம். ஆனால் அதன் கனவு எதிர்காலத்திலேயே இருக்க முடியும். இன்றைய இந்தியாவை திருப்பி இறந்தகாலத்துக்குக் கொண்டுசெல்ல முடியாது. அதற்காக வரலாறு இந்நிலத்தில் உருவாக்கிய இன்றைய சூழலை ரத்தம் கசிய வெட்டித்திருத்துவதும் சாத்தியமல்ல. காந்தி தன்னுடைய தேசியமாக முன்வைத்தது அவரது இலட்சியக்கனவான ஓர் எதிர்காலத்திட்டத்தை. அதை அடைவதற்கு இந்திய நிலப்பகுதியில் வாழும் மக்கள் அனைவரும் தங்கள் பேதங்களை தாண்டி ஒருங்கிணையும் ஒரு அரசியல்வெளியை உருவாக்க அவர் முயன்றார். அதுவே இந்திய தேசியப் போராட்டத்தில் அவரது பங்களிப்பு.

இந்திய சமூகத்தை பேதப்படுத்தும் எந்த ஒரு கருத்தியலுக்கும் சமரசமில்லாத எதிர்த்தரப்பாகவே காந்தி இருந்தார். அவரது பண்பாட்டு வேர் என்பது பிரிவினைக்கான அடையாளங்களில் இல்லை சமரசத்துக்கான மனநிலைகளில் இருந்தது. அவரது இந்தியா இறந்தகாலத்துக்கு திரும்பிப்போகும் முயற்சி அல்ல. பாரம்பரியத்தில் இருந்து வேர்கொண்டு எதிர்காலத்துக்காக தன்னை வளர்த்துக்கொள்ளும் ஓர் இலட்சியவாதம் அது.

**காந்தியின் தேசம் நோக்கி...**

இன்றைய இந்தியாவை காந்திய தேசியம் என்று சொல்பவர்கள் காந்தியை உணராதவர்களே. இன்றைய இந்தியாவில் அர்ப்பணிப்புள்ள எல்லா காந்தியர்களும் ஏதேனும் ஒருவகையில் இந்திய அரசையும் இந்திய சமூக அமைப்பையும் எதிர்த்துப் போராடுபவர்களாகவே இருக்கிறார்கள் என்ற உண்மை நம் கண்முன் இருக்கிறது. சமாதானமே அடையாத போராளிகளாக, கடைசிக்கணம் வரை ஓயாத கிளர்ச்சியாளர்களாக மட்டுமே அவர்கள் இருந்திருக்கிறார்கள், இருக்கிறார்கள். பாபா ஆம்தே, அண்ணா ஹசாரே, சுந்தர்லால் பஹுகுணா, ஜகன்னாதன்-கிருஷ்ணம்மாள், சிவராம் காரந்த், மேதா பட்கர், வந்தனா சிவா என அந்தப்பட்டியலை நீட்டலாம். காந்திய தேசியம் என்பது இன்றிருக்கும் ஓர் அமைப்பு அல்ல அது ஒரு இலட்சியக்கனவு என்பதற்கான ஆதாரம் அதுவே.

காந்தி இந்தியாவுக்கு அளித்தது ஒரு தேசியக் கனவை. கூடவே அக்கனவைச் சாத்தியமாக்குவதற்கான ஒரு வாய்ப்பை. நம் கையில் கிடைத்தது அந்த வாய்ப்பும் கனவும்தான். நாம் நமது பேராசையால், நுகர்வுவெறியால், சாதிமத இன மொழி சார்ந்த பிளவுப்போக்கால், அரசியல் அதிகார வெறியால், அன்றாடச் சமரசங்களால் அதை இழந்துவிட்டு காந்தியை குறைகூறுகிறோம். தனது தோல்விக்கெல்லாம் தந்தைதான் காரணம் என்று சொல்லும் உதவாக்கரைப்பிள்ளைகளை நாம் தெருத்தெருவாகக் கண்டுகொண்டிருக்கிறோம் அல்லவா?

******